ஓம்

# விபுலாநந்தர் உள்ளம்

தொகுப்பாசிரியர் :

திரு. ச. அம்பிகைபாகன் B. A., அவர்கள்
(யாழ்ப்பாணம் வைத்தீஸ்வர வித்தியாலய
முன்னாள் அதிபர்)

அச்சுப்பதிப்பு – வெளியீடு :

விபுலாநந்த அச்சகம் – புத்தகசாலை
யாழ்ப்பாணம்



சுவாமி விபுலாநந்தர் அவர்கள்

## பொருளடக்கம்



முதற்பதிப்பு : 1976

பதிப்புரிமை :

**விபுலாநந்த அச்சகம் – புத்தகசாலை**

காங்கேசன்துறை **வீதி**, யாழ்ப்பாணம்



இப்புத்தகம் யாழ்ப்பாணம் 248/5 காங்கேசன்துறை வீதியிலிருக்கும் விபுலாநந்த அச்சகத்தில் வேலாயுத பிள்ளை கந்தசாமி அவர்களால் அச்சிடப்பெற்று 19-3-76 ஆம் திகதி வெளியிடப்பெற்றது.

**ரூபா 3-50**

# பதிப்புரை

சில மாதங்களுக்கு முன்புதான் நாம் விபுலாநந்த அச்சகத்தை ஆரம்பித்தோம். அப்பொழுது நமக்கு ஆசி கூறவந்த வைத்தீஸ்வர வித்தியாலய முன்னாள் அதிபர் திரு. ச அம்பிகைபாகன் அவர்கள் தம்மிடம் புத்தக ரூபத்தில் வெளிவராத விபுலாநந்த சுவாமிகளின் கட்டுரைகள் சில இருப்பதாகவும், அவற்றை வசதியான நேரத்தில் வெளியிட்டால் பிரயோசனமாயிருக்குமென்றும் கூறினார்கள். நாங்களும் அதற்கு உடன்பட்டோம். ஆனால் அதை நிறைவேற்றும் நாள் விரைவில் வருமென நாம் எதிர்பார்க்கவில்லை. பின்னர் ஒருநாள் அதிபர் அவர்கள் எங்களைச் சந்தித்து மட்டக்களப்பில் தமிழாராய்ச்மாநாடு நடக்கப்போகுஞ் செய்தியைக்கூறி, அவ்விழாவில் தாம் முன்பு கூறிய நூலை அச்சிட்டு வெளியிட முடியுமானால் மிகவும் பொருத்தமாக இருக்குமெனக் கூறினார். விபுலாநந்த அச்சகத்தின் முக்கிய நோக்கங்களில் விபுலாநந்த சுவாமிகளின் நூல்களை வெளியிடுவதும் ஒன்றாகவிருந்தபடியால் எங்கள் சிரமங்களையும் பாராது உடன்பட்டோம்.

நாம் உடன்பட்டதும் அதிபர் அவர்கள் கட்டுரைகளைத் தந்ததோடு, சுவாமிகளின் வாழ்க்கை வரலாறு, படம், அணிந்துரை முதலியவற்றையும் பெற்றுத் தந்தார்கள். அச்சுப்பிழைகள் பார்ப்பதற்கும் ஒரு சிறந்த வித்துவானை ஒழுங்குசெய்தார்கள். இவற்றுக்கெல்லாம் அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். இதுபோன்று எதிர்காலத்திலும் உதவி பல செய்வார்களென எதிர்பார்க்கிறோம்.

யாழ்ப்பாணத்தில் சுவாமிகளின் நினைவை நிலை நாட்டுவதற்குப் பல ஆலோசனைகள் செய்துவருகிறோம். எங்கள் நினைவு நிறைவேறும் என்பதற்குச் சில நற்குறிகள் காணப்படுகின்றன. நாம் வெளியிடும் "விபுலாநந்தர் உள்ளம்" என்னும் முதல் நூலைத் தமிழ் மக்கள் பெருந்தொகையில் பெற்று ஆதரித்தலே எங்களுக்கு இத்துறையில் ஊக்கம் தருவதாகும். எம்மை இத்துறையில் ஈடுபடுத்திய திருவருளை வாழ்த்தி வணங்குகிறோம்.

விபுலாநந்த அச்சகம் - புத்தகசாலை
உரிமையாளர்கள்.

236, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.

---

# முன்னுரை

சுவாமி விபுலாநந்தர் சந்நியாச தீட்சை பெற்று 1925-ம் ஆண்டில் இலங்கை திரும்பியதும், இராம கிருஷ்ண சங்கப் பாடசாலைகளின் முகாமையாளரானார். சிறிது காலத்துக்குள் சங்கத்தின் கீழிருந்த திருக்கோண மலை இந்துக்கல்லூரியை விருத்தி செய்யும் பொருட்டு, அக்கல்லூரியின் அதிபரானார். அங்கிருந்து யாழ்ப்பா ணம், மட்டக்களப்பு என்னும் இடங்களிலுள்ள இராம கிருஷ்ணசங்கப் பாடசாலைகளை மேற்பார்வை செய்து வந்தார். இக்காலத்தில் சுவாமிகளின் உத்தம சீடரான திரு. மா. பீதாம்பரனாரும், புலவர்மணி ஏ. பெரியதம்பிப் பிள்ளை அவர்களும் சுவாமிகளுடனிருந்து வந்தார்கள்.

சுவாமிகள் திருக்கோணமலையிலிருக்கும் பொழுது தான் கொழும்பு விவேகானந்தசபை ஆரம்பித்த "விவேகானந்தன்" பத்திரிகைக்கு முதலிரண்டு வருடங் கள் ( 1926 — 1927 ) ஆசிரியராகவிருந்தார். இப்பத் திரிகையில் ஆசிரியர் "உள்ளக்கிடக்கை" என்னும் தலைப்பில் கல்வி, சமயம், தமிழ்மொழி வளர்ச்சி பற்றி மாதந்தோறும் சிறந்த கட்டுரைகள் எழுதிவந்தார். திரு. பீதாம்பரனார் இப்பத்திரிகைக்கு உதவி ஆசிரியர் போலிருந்து தாமும் அதில் கட்டுரைகள் எழுதினார்.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன் திரு. பீதாம்பரனார், அன்பர் ஒருவர் மூலம், சுவாமிகள் விவேகானந்தன் பத்திரிகையில் எழுதிய கட்டுரைகளை எனக்கு அனுப்பி, அவற்றைப் புத்தக ரூபத்தில் வெளியிடும்படி கேட்டுக் கொண்டார். ஒரு பெரியார் தாம் இக்கட்டுரைகளைப் பார்வையிட்டு வெளியிடுவதாகக் கூறி, அவற்றை வாங்கிக்கொண்டு சென்றார். அவர் அக்கட்டுரைகளைப் பிரசுரிக்கவுமில்லை; அவற்றைத் திருப்பித் தரவுமில்லை.

இக்கட்டுரைகளை நான் வேறெங்கு பெறலாமெனத் தேடியபோது, சுன்னுகம் திருமகள் அழுத்தகத்துக்கும், தனலக்குமி புத்தகசாலைக்கும் நெடுங்காலம் நிர்வாகியாக இருந்தவரும், சிறந்த இலக்கிய ரசிகருமான திரு. கோ. அப்பாக்குட்டி அவர்கள் தாம் வைத்திருந்த "விவேகானந்தன்" முதல் தொகுதியை எனக்கு உதவினுர். அவர் உதவிய தொகுதியிலிருந்தே இப்பொழுது வெளிவரும் கட்டுரைகள் பிரதிசெய்யப்பட்டன.

இக்கட்டுரைகளில் இரண்டு என்ருல் முன் பிரசுரிக்கப்பெற்றுள்ளன. "யாழ்ப்பாணத்துக்கு ஒரு பல்கலைக்கழகம்" என்னும் கட்டுரை 1960 ஆம் ஆண்டில் இந்துசாதனத்தில் பிரசுரிக்கப் பெற்றுள்ளது. அப்பொழுது ஈழத்தில் தமிழ்ப் பல்கலைக்கழகம் எங்கு நிறுவப்படவேண்டுமென்பது பற்றி விவாதம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இக்கட்டுரை அக்காலத்தில் மிகப் பிரபல்யமாகி, பல கல்விமான்கள் இதனைப் பிரயோசனப் படுத்தினர். மற்றைய, 'இந்துமதம்' பற்றிய கட்டுரை "இலங்கையில் சுவாமி விவேகானந்தர்" என்னும் நூலிலே சுவாமி விவேகானந்தர் நூற்ருண்டு விழாவின் போது 1963 ஆம் ஆண்டிற் பிரசுரிக்கப் பெற்றது.

இதன் பின்னரும் இக்கட்டுரைகளைப் புத்தக ரூபமாக வெளியிடுவதற்குப் பலமுறை முயற்சி செய்தேன். காரியம் கைகூடவில்லை. இப்பொழுதுதான் புதிதாக அமைக்கப்பட்ட விபுலாநந்த அச்சகத்தின் உரிமையாளர்கள் இப்புத்தகத்தை அச்சிட முன்வந்துள்ளனர். உரிமையாளர் இருவருள் அருட்கவிமாமணி திரு. வே. செல்வநாயகம் அவர்கள் ஒரு சிறந்த வரகவி. அவரியற்றிய கவிதைகள் பல வெளியீடுகளில் வெளிவந்தன. அவற்றைப் படித்து இன்புற்றுள்ளேன். மற்றைய உரிமையாளரும் அவரின் ஏனைய சகோதரர்களும் என்னிடம் வண்ணை - வைத்தீஸ்வர வித்தியா

லயத்தில் கல்விகற்ற பழைய மாணவர்களாவர். சைவப் புரலவர் கந்தசாமி அவர்கள் சாந்தமுடையவராயும் சமயப் பற்றுடையவராயு மிருந்தார். அப்பண்புகள் இப்பொழுது மலர்ச்சிபெற்றுள்ளன. இவர்களிருவருடைய தமிழ் மொழிப்பற்றும் சமயப்பற்றுமே, புதிதாக ஆரம்பிக்கப்பெற்ற ஓர் அச்சகத்துக்கு இருக்கக் கூடிய கஷ்டங்களையும் பொருட்படுத்தாது இந்நூலை வெளியிட ஊக்கப்படுத்தின. இவர்களுக்கு என்சார்பிலும் ஈழத்தமிழ் மக்கள் சார்பிலும் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இவர்கள் மென்மேலும் சிறந்த நூல்களை வெளியிட இறைவன் அருள்புரிவாராக.

விவேகானந்தன் பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகளோடு இன்னும் சில விஷயங்கள் இங்கு சேர்க்கப் பட்டுள்ளன. சுவாமிகள் 1926 ஆம் ஆண்டில் பருத்தித் துறையில் 'யாழ்ப்பாணப் புலவர் சரித்திரம்' என்னும் பொருள்பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அதில் ஒரு பகுதி விவேகானந்தன் பத்திரிகையில் வெளிவந்தது. வெளிவந்த பகுதியின் சிறப்பு நோக்கி, அது பூரணமில்லாத போதும் இங்கு பிரசுரிக்கப்படுகிறது. மேலும் சுவாமிகள் தமது இலட்சியங்களை வெளிப் படுத்தி இமயமலைச்சாரலிலிருந்து முதுதமிழ்ப்புலவர் நல்லதம்பி அவர்களுக்கு எழுதிய கடிதம் சுவாமிகளின் மறைவுக்குப் பின் ஈழகேசரியில் பிரசுரிக்கப்பட்டது. அதில் கூறப்படும் விஷயங்கள் இந்நூலுக்குப் பொருத்தமாக விருப்பதால் அக்கடிதமும் இங்கு பிரசுரிக்கப்படுகிறது.

இந்நூலின் பதிப்பாளர்கள் சுவாமிகளின் வரலாற்றையும் வெளியிடுவது பொருத்தமாயிருக்குமெனக் கூறினர். அப்பொழுது சுவாமிகள் மறைந்தபொழுது திரு. பீதாம்பரனார் அவர்களால் எழுதப்பெற்று ஈழ

கேசரியில் வெளிவந்த "அடிகள் வரலாறு" என்னும் கட்டுரையை வெளியிடலாமெனக் கூறினேன். அவ் வரலாறு முற்றுப்பெருதபடியால் அதனை முற்றுப் பெறச் செய்து தரும்படி பதிப்பாளர்கள் கேட்டபடி யால் பிற்பகுதியை யான் எழுதி சுவாமிகளின வர லாற்றுக் குறிப்புகளை ஒருவகையில் நிறைவு செய் துள்ளேன்.

சுவாமிகள் கரந்தைச் தமிழ்ச் சங்கத்து இருபத்தி ரண்டாம் ஆண்டு விழாவுக்குத் தலைமை தாங்கியகாலை அவர்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புப் பாடலை இங்கு வெளியிடுகின்றோம். யாழ்ப்பாணத்தில் சுவாமிகள் நினைவாகத் திரு பீதாம்பரனாரின் முயற்சியால் 1948 ஆம் ஆண்டில் ஒரு முத்தமிழ் விழா நடைபெற் றது. அதற்கு நவாலியூர் திரு. சோமசுந்தரப்புலவர் "விபுலானந்தர் நினைவு" என்னும் பொருள்பற்றி சில செய்யுள்கள் எழுதினார். அவையும் இங்கு பிரசுரிக்கப் படுகின்றன.

இந்நூலுக்கு ஓர் அணிந்துரை உதவ வேண்டு மெனப் புலவர் மணி ஏ. பெரியதம்பிப்பிள்ளை அவர் களைக் கேட்டேன். அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சிறிய கால எல்லையுள் மனமுவந்து ஒரு சிறந்த அணிந் துரை தந்துள்ளார்கள். அவர்களுக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். அவர்களின் தமிழ்ப் புலமை யைத் தமிழ் கூறும் நல்லுலகம் நன்கறியும். வேத உபநிடதங்களின் சாரமான பகவத்கீதையை வெண் பாவாகத் தந்துகொண்டிருக்கிறார்கள். காலத்துக் கேற்ற இப்பணியை நிறைவேற்ற இறைவன் இவர் களுக்கு அருள் புரிவாராக.

இந்நூலில் காணப்படும் கட்டுரைகளைப் பிரதி செய்து கொடுத்த அளவெட்டி இளைப்பாறிய ஆசிரி யர் திரு. வை. க. சிற்றம்பலம் அவர்களுக்கு எனது

நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந் நூலில் காணப்படும் விபுலானந்த சுவாமிகளின் படத்தை சுவாமி ஜீவானந்தா அவர்கள் தந்துதவினுர்கள்.

மட்டக்களப்பில், சுவாமி விபுலானந்தர் மணிமண்டபத்தில் சுவாமிகளின் தலைசிறந்த மாணவரான பேராசிரியர் சு. வித்தியானந்தன் தலைமையில் நடைபெறும் தமிழாராய்ச்சி மாநாட்டில் இந்நூல் வெளியிடப்படுவதின் பொருத்தத்தை எப்படிக் கூறுவது' திருவருளின் செயலென்றே கூறுவோம்.

நான் பட்டதாரியாக வெளிவந்த காலம் (1933ஆம் ஆண்டு) பொருளாதார மந்தம் ஏற்பட்டு (depression) வேலை வாய்ப்பு அரிதான காலம். அக்காலத்தில் எனக்கு சிவானந்த வித்தியாலயத்தில் ஓர் ஆசிரியப் பதவியைத் தந்ததோடு சுவாமிகள் தம்மோடுறையும் பெறற்கரும் பேற்றையும் கொடுத்தார். பின்னர் இருவருடங்கள் முடியுமுன் என்னை யாழ்ப்பாணம் வைத்தீஸ்வர வித்தியாலயத்துக்கு அதிபராக அனுப்பினுர். அங்கு முப்பத்திரண்டு ஆண்டுகள் கடமையாற்றும் பேற்றைச் சுவாமிகளின் ஆசியினுல் பெற்றேன். அன்னுரின் பொன்னுர் திருவடிகளில் இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

ச. அம்பிகைபாகன்.

''மணிமனை''
மல்லாகம்,
இலங்கை. 12-3-76

# அணிந்துரை

— மட்டக்களப்பு ஏ. பெரியதம்பிப்பிள்ளை —

விபுலாநந்த அடிகளார் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர் தம்மையும் தம் அறிவாற்றல்களையும், உடைமைகளையும் உலகுக்கு அர்ப்பணித்து வாழ்ந்த உபகாரி. தமிழ் மொழியையும், வடமொழியையும், தாமறிந்த மேல்நாட்டு மொழிகளையும் ஒன்ருக இணைத்துப் பயன் செய்து காட்டிய பரந்த உள்ளம் படைத்தவர். பழமையைப் புதுமையால் அழகு செய்தும், புதுமையைப் பழமையால் அழகுசெய்தும் உள்ளுவகை கண்ட உத்தமர். விஞ்ஞானத்தால் மெய்ஞ்ஞானத்தை அரண்செய்த மேதாவி. கல்வியிலும் அறிவு சிறந்தது. அறிவிலும் ஆற்றல் சிறந்தது ஆற்றலிலும் அர்ப்பணம் சிறந்தது. என்னும் கொள்கை உடையர் தம் அறிவால் பிறரறிவைக் கூர்மை பாராமல் அறிவைக் கூட்டாகப் பயன்செய்து இன்பம் காண்பதில் நாட்டம் கொண்டவர். அடிகளார் இருபதாம் நூற்றுண்டின் ஈழநாட்டுச் சோதி

இறவாத புகழாளராய் மறைந்து அடிகளார் நம்முள்ளம் கலந்து கால் நூற்றுண்டு கழிந்துவிட்டது. அவர் நம் உள்ளத்தே மறைந்து நிற்றல்போல அவரின் உள்ளமும் நம்மிடையே மறைந்து கிடக்கின்றது. துறவியாகவும், பேராசிரியராகவும், பத்திரிகாசிரியராகவும், கவிப்புலவராகவும், பெருஞ்சொற் கொண்டலாகவும் அடிகளார் வெளியிட்ட அளப்பரிய உள்ளக்கருத்துகள் தாம் இயற்றிய யாழ் நூல் முதலிய நூல்களின் வடிவிலும், மட்டக்களப்பு அருள் செல்வநாயகம் என்னும் அருந்தமிழ் புதல்வர் வெளியிட்டுள்ள தொகை

நூல்களின் வடிவிலும் காட்சியளிப்பனபோக மறைந்து கிடப்பன மிகப்பல

இவற்றையெல்லாந் தேடிக்கண்டு வெளிக்கொணர்தற்குச் செய்யும் முயற்சிகள் சீரிய தமிழ்த் தொண்டு மாத்திரமல்ல; நாம் அடிகளாரின் பரம்பரை யென்கின்ற உரிமைக்கும் தகைமைக்கும் ஏற்ற கடமைகளாகும். இந்நிலையிவ் அடிகளார் பத்திராசிரியராகச் செய்த அரும் பெருஞ் சேவையின் ஒருபகுதியை 'விபுலாநந்தர் உள்ளம்' என்னும் பெயருடன் உலகுக்கு உதவுகின்ற ஒரு நினைவுப் பணியாக இச்சிறுதொகை நூல் வெளிவருகின்றது.

இத்தொகைநூல் ஆசிரியர் திரு. ச. அம்பிகைபாகன் அவர்கள் அடிகளாரின் அருளுக்கும் நன்மதிப்புக்கும் பாத்திரமான உண்மை நண்பர் யாழ், வண்ணை வைத்தீசுவர வித்தியாலயத்தின் வளர்ச்சிக்குத் தொண்டுபூண்ட முன்னை நாள் அதிபர் உலகியலறிவும், சமய ஞானமும், நன்னடையும் ஒருங்கே அமைந்த இனிய பண்பாளர். நிலையில்லாத இவ்வுலகில் நிலையில்லாத பொருளைக் கொண்டும், நிலையான பரம் பொருளை அடையலாம் எனனும் நம்பிக்கை உள்ளவர்.

அடிகளாரின் தன்னலமற்ற சேவை உலகுக்குப் பயன்பட வேண்டும் உலகம் அதை அனுபவிக்கவேண்டும் அறிவுப் பயன் பெறவேண்டும். ஆக்கமடைய வேண்டும் என்னும் நோக்குடன் ஆக்கியோன் இதை வெளியிடுகின்றார். நோக்கம் நல்லது; பொருளும் நல்லது மக்கள் இந்நூலை நன்கு பயன்செய்து வாழ்க. நூல் வாழ்க நூலாசிரியர் வாழ்க. விபுலானந்த அடிகளார் என்னுர் திருப்பெயர் தமிழ் உள்ளளவும் வாழ்க.

கேசவ வாசம்,
செங்கலடி. இ. மா

8-3-76

உயர்திரு.

# சுவாமி விபுலாநந்தர் அவர்கள்

[கரந்தைத் தமிழ்ச்சங்கத்து இருபத்திரண்டாவது ஆண்டு விழாவில் அடிகளார் தலைமை வகித்த ஞான்று, ஷெ சங்கத்தினர் பாடிய வரவேற்புப் பாடல்.]

பொங்குஞ் செஞ்சொல்லாற் பொருளா லணிதன்னு
லெங்கும் புகழும் இனிமையாற் — றங்கும்
இளமைத் திறன்மேவி என்றும் வழங்கும்
வளமை தனைக்கொண்ட மாண்பால் — உலகிற்
றனக்கு நிகரில் தமிழ்த்தேவி எங்கள்
அனைக்குச் செறிமைந்தராவார் — கணக்கிற்
இருகோடி மேலார் இவருட் டலைமை
மருவுஞ் சிலருள்ளே மாண் பார் — ஒருவன்
இவனென்னும் சுட்டேய் தொழிலோய்! நின்சீர்கள்
இவையென்னச் சுட்டல் எளிதோ — சுவையென்ப
தாங்கும் இயல்பிற் றமிழ்ச்சொல் வழக்கென்றும்
பாங்குற் றுயரும்யாழ்ப் பாணத்தில் — ஓங்கி
யுயர்வான் குடியுற்ற ஒண்பிறையிற் றோன்றி
மயில்வா கனப்பெயரை மன்னிப் — பயிரின்
வளமை நெறியில் வருபயன்போல் நற்சீர்
திறமை யகத்தே யிலங்கக் — கலைகள்
பிணங்கி எமதுதவப்பே றென்னச் சாரக்
குணங்க ளொலாமங்கவன் கூட — மணங்கொண்ட
தண்டமிழின் மேலாம் தரமெண் ணுலகேத்தும்
பண்டிதரென் றோங்குமொரு பட்டம் — இலண்டன்
கலைக்கழகத் தாராய்ந்து காட்டறிவு நூலிற்
புலக்கிழமை யுஞ்சேர்ந்து பொற்ப — நிலக்கணொரு
தன்னே ரிலாக்கவிஞன் தாகூரின் பாக்களெனப்
பொன்னேரும் பாக்கள் புகல்திறனும் — பண்ணும்
உணரயும் எழுதும் உரைநடையும் யார்க்கும்

நிறையுமெய்ப் பாட்டை நிகழ்த்தச் — செறியும்
அணியின் கலைக்களஞ் ஆமதங்க சூளா
மணிமுன்னு நூல்கள் வகுத்தே — துனியும்
புலமை யிவையெல்லாம் பொறபக்கொள் ளின்பம்
உலகம் அடையவுளங் கொண்ட — நிலையால்
மருவும் பிறணி மருவாத் துறவு
உருவும் உளமும் உறவே ... பொருவும்
இணையி விராமக் கிருட்டினப்பேர் தனி வி
வனையும் ஒருமா மடத்தின் — துணையாகி
மாசில் பலதொண்டு மன்னி யுலகெங்கும்
பேசு விபுலானந்தப் பேரெய்தி — வீசொளியுட்
கண்ணென்னும் கல்விக் கலைகள் பயில்பள்ளி
எண்ணு மிலங்கைமுத லெவ்விடத்தும் — நண்ணச்செய்
அண்ணல் நினின்சீர் ஆய்ந்துரைத்தல் ஆகாபோல்
எண்ணற்கும் ஆங்கண் இயையாவே! ... அண்ணு
மலையார் கலைமன்றில் மானும் தமிழ்ப்பாற்
தலைமை தனையருளாற் றுங்கி — நிலையும்
தமிழ்த்தாயின் தொண்டே தலைமையாக் கொண்டு
தமிழ்த்தாயின் வாழ்வே தனதாய்த் — தமிழ்த்தாய்
திருவருளெந் நாளும் திகழக்கொள் செம்மால்!
வருக! இவண்வருக! வள்ளால்! வருகவே!
வாழி எமதன்ப! வாழி பலவூழி!
வாழி பலநலனும் வாய்ந்து!

(கரந்தைத் தமிழ்ச் சங்கம் தஞ்சை — 1938)

ஈழகேசரி 27-7-1947

---

# விபுலாநந்தவடிகள் நினைவு

— நவாலியூர், திரு. க. சோமசுந்தரப்புலவர் —

திங்களுங் கங்கையும் பொங்கரவு மணிகின்ற
சிவபிரா னருளி னாலே
செந்தமிழ் வழங்குமெம் புண்ணியத் திருநாடு
செய்தவத் தாற்பி றந்தாய்;
சங்கமுத் தமிழுமாங் கிலமுமா ரியமுமாந்
தாவில்மொழி கற்று யர்ந்தாய்;
சைவசித் தாந்ததத் துவஞான சமரசச்
சன்மார்க்க நிலையில் நின்றாய்
எங்கணு மிசைக்கதிர் விரித்திரு ளகற்றிடும்
ஞான சூரிய னாகினாய்
எரியிலோ புனலிலோ சிதலிலோ மண்ணிலோ
இல்லாது போன விசைநூல்
அங்கணுல கத்திலே நிலைநிற்க வருள்செய்த
அடிகளுனை நினைய வருள்வாய்;
ஐம்புலத் தொல்லைதபு செம்புலச் செல்வவிபு
லாநந்த ஞான குருவே.

பாருக்கு ளேயண்ட ரமுதுக்கு நேரான
பைந்தமிழ்ப் பாடல் பொழியும்
பருவமுகி லேபரம கம்சர்தரு நெறியிலே
பக்திமிக வுடைய வரசே!!
நேருக்கு வேறொருவ ரில்லாத தோன்றலே
நித்தியா னந்த வுருவே!
நின்னையல தெங்களுக் கிவ்வுலகில் வேறியார்
நீங்காத பெருமை தருவார்.

வீரர்க்குள் வீரனே பல்சலைக் கழகங்கள்
மேவி விரிவுரை நிகழ்த்தும்
மெய்யறிவு நிறைகின்ற பொன்மணிப் பீடமே
விண்ணு றெழுந்த மதியே!!
ஆருக்கு நன்மைபுரி யறவனே! துறவனே!!
அடிகளுனை நினைய வருள்வாய்
ஐம்புலத் தொல்லைதபு செம்புலச் செல்வவிபு
லாநந்த ஞான குருவே

தேடும் மனச்செய்கை தமிழுக்கு மாண்டவன்
திருவடிக ளுக்கு மாக்கிச்
செந்நாவி னற்செய்கை யினிமைசெறி விரிவுரைகள்
செய்யுட் டொகைக்கு மாக்கிக்
கூடுங் கரச்செய்கை யறிவுமிளிர் கட்டுரை
கொளுத்துதற் காக்கி யுடலைக்
கோதிலிறை வன்பணி தமிழ்ப்பணிக் காக்கிநீ
குவலய மதிக்க வாழ்ந்தாய்!
ஓடும் பசும்பொன்னு மொக்கவே கருதுமெய்
யுணர்வுடைய தமிழ ரிறைவா
உன்னைவல் லாலெமக் கினியெவர்க ளினியவர்கள்?
உத்தமச் சித்த நிலையில்
ஆடும் பெருங்கூத்த னடியிணைகள் மறவாத
வடிகளுனை நினைய வருள்வாய்
ஐம்புலத் தொல்லைதபு செம்புலச் செல்வவிபு
லாநந்த ஞான குருவே.

முத்தமிழ் மகாநாடு 23-4-48

ஈழகேசரி 25-4-1948.

# சுவாமிகள்

# வரலாற்றுக் குறிப்புகள்

(மா. பீதாம்பரன் — ச. அம்பிகைபாகன்)

"இதத்த செந்தமிழ் அறிவினுற்
சங்கரை ஏய்ப்பார்
விதத்த யாழிசைப் பாடலால்
விஞ்சையர் நிகர்வார்
குதித்த தேன்சுவைக் கவிதையாற்
குறுமுனி போல்வார்
மதித்த நீர்வளப் பண்ணைசூழ்
அப்பதி மாக்கள்"

என்று தொன்மாவிலங்கையாகிய ஈழமாநாட்டின் சிறப்பினைக் கூறிப்போந்தார். "கரசைப் புராண" நூலாசிரியர். இச்செய்யுட்கு இலக்கியமாய் விளங்கிய ஸ்ரீமத் விபுலானந்த சுவாமிகள் இறைவனுடைய திருவடித் தாமரை நீழலை எய்தினர் என்னும் செய்தி சிறப்பாக ஈழநாட்டினர்க்கும், பொதுவாகத் தமிழகத்தினர்க்கும் அளப்பரும் பெருந்துன்பத்தை விளைத்து நிற்கின்றது. இயலிசை, நாடகம் இனிதோங்க, வேதநெறி தழைத்தோங்க, மிகுசைவத் துறைவிளங்க, தமிழ்ப் பெருமை தலைசிறக்கப் பெருந்தொண்டாற்றிய பெருமான். 'யாழ் நூல்' கண்ட இசை நூற கலைஞன், நாடகத் தமிழ் நூலாகிய 'மதங்க சூளாமணி' யினை மாநிலத்தார்க்கு வழங்கிய வள்ளல். 'ஆங்கில வாணியை' அழகுறப்

புனைந்த இயற்றமிழ்க் கவிஞன், 'மேற்றிசைச் செல்வத்தில்' நாற்றிசை நலமுந்தந்த நற்றமிழ்ப் புலவன், 'விஞ்ஞான தீப' மாம் விளக்கினைத் தந்த வித்தகன், ஓதிசிய ஏயீனிய காப்பியச் செய்யுள்களையும் மகாகவி தாகூரின் செய்யுள்களையும் தமிழுலகறியச் செய்த தமிழ்ப்பெருங் கவிஞன் மண்ணுலகம் விட்டு விண்ணுலகெய்தினன்; மாணக்கரும் உழுவலன்பினரும் ஊராரும் நாட்டாரும் உளமுடைந்தலறுகின்றனர்.

## வரலாற்றுச் சுருக்கம்

சுவாமிகள் இற்றைக்கு ஐம்பத்தைந்து ஆண்டுகளின் முன் 1892 ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 29-ம் திகதி (கர ஞு பங்குனி மாதம் 14 ஆம் வ) ஞாயிற்றுக்கிழமை மட்டக்களப்பிலுள்ள காரேறு மூதூரிற் பிறந்தார்கள்.

"யசோதைப்" பிராட்டியார் கௌசல்யாதேவியார், மகாமாயா தேவியார், பகவதியார், மாதினியார், சந்திரமணி தேவியார், புவனேஸ்வரி மாதா, இசைஞானியார் என்றின்னோரன்ன பெரியோர் தெய்வத்தன்மை பொருந்திய தமது அரும் பெறன் மக்களை மடித்தலத் திருத்திச் சீராட்டிப் பாராட்டும் பொழுது அம்மக்களது "பெருமையை ஒவ்வொருவாற்றான் அறிந்தாரெனினும், அவரைத் தம் செல்வப் புதல்வராகக் கொண்டாரேயன்றி வேறுபட எண்ணினர் அல்லர்" என்று சுவாமிகள் (பண்டித மயில்வாகனர் B. Sc) ருத்ரோற்காரி ஞு ஐப்பசி மீ குமரன் என்னும் பத்திரிகையில் எழுதிய கட்டுரை ஒன்றிற் குறித்துள்ளார்கள்.

சுவாமிகள் சிறந்த நிலையினை எய்தியதற்குக் காரணம் அவர்களது தாயாராகிய கண்ணம்மை யார். தம்பெயர்க்கு இலக்கியமாகிய தேவியாரிடத்து இடையறு அன்பு பூண்டவர். கண்ணம்மையார் சிவபதம் எய்தியது (1914 ம் ஆண்டில்) ஏறக் குறைய 33 ஆண்டுகளின் முன்பு எனினும் கண் ணம்மையாரின் கருணையின் மாண்பினையும் ஒழுக் கத்தின் உயர்ச்சியையும் அக்கிராமத்து மகளிர் இன் றும் பாராட்டுவதை யான் காதாரக் கேட்டுள் ளேன்.

சுவாமிகளின் தந்தையார் பெயர் சாமித்தம்பி யார் என்பது இவர் சுவாமிகளின் கல்வித் தேர்ச் சிக்குப் பெரிதும் உதவியாயிருந்தனர். சுவாமிகள் பத்தாண்டு இளைஞராய் இருந்த காலத்தில் சிதம் பரத்துக்கு யாத்திரை செய்து மீண்ட சாமித்தம்பி யார் "நால்வர் சரித்திரம்" நாவலரியற்றிய சைவ நூல்கள் முதலிய நூல்களை வாங்கி வந்து மகனார்க் குக் கொடுத்தார்கள், அக்காலந் தொடங்கி நாவ லர் சுவாமிகட்கு ஒரு குறிக்கோளாக விளங்கினர். சுவாமிகள் நாவலர் மீதுள்ள அன்பு இதற்குச் சான்றாகும். "நல்லை நகர் ஆறுமுக நாவலர் பிறந்த திலரேற் - சொல்லு தமிழ் எங்கே? என்று கூறுவ துண்டு.

கண்ணம்மையாரின் தந்தையார் பெயர் இராச கோபாலபிள்ளை. இவர் யாழ்ப்பாணத்து உடு விலைச் சேர்ந்த இராமனாதர் குமாரர். வயிரமுத்து வின் மகனாவர். கண்ணம்மையாரின் தாயாரின் தாயார் யாழ்ப்பாணத்து வட்டுக்கோட்டையைச் சேர்ந்த சேதுநாதரின் புதல்வியாராவர்.

சாமித்தம்பியார் கண்ணம்மையார் என்னும் இருவரின் நற்றவப் பயனாய் வந்த மயில்வாகனார்க்கு எழுத்தறிவித்தவர் (காலஞ்சென்ற) குஞ்சுத் தம்பி ஆசிரியர் ஆவர். (மட்டக்களப்பு) காரைதீவில் உள்ள பிள்ளையார் கோயில் அருச்சகராயிருந்தவரும், அவ்வூர்ச் சைவப் பாடசாலையிலே தலைமை ஆசிரியராய் இருந்தவரும், தக்ஷிண கைலாய புராணப் பதிப்பாசிரியரும் ஆகிய (யாழ்ப்பாணத்துப் புலோலி) காலஞ் சென்ற பொ. வைத்திலிங்க தேசிகரிடத்திலே மயில்வாகனனார் தமிழும் ஒரு சிறிது வடமொழியும் பயின்றார்,

இவர்க்குக் கணிதத்திற் சுவையூட்டியவர்கள் ஈழமண்டலத்துக் கணித கலாநாயகர்களுள் ஒருவரான தில்லைநாயகம் B. A. (வித்தியாதரிசி) அவர்களும், செயின் மைக்கேல் கலாசாலை பேராசிரியர் வண. எவாணல் சுவாமியாரும் ஆவர். மயில்வாகனனார் சில ஆண்டுகளாக ஆங்கில ஆசிரியராக விருந்து 1915 ஆம் ஆண்டு வரையில் கொழும்பு அரசினர் ஆங்கில ஆசிரிய கல்லூரிப் பிரவேசப் பரீட்சையில் விசேஷ சித்தி எய்தி அங்கே சென்று பல்வகைக் கலைத்துறைகளிலும் நன்கு பயின்றார். அக்காலத்து ஆசிரியர் கல்லூரித் தலைவராயிருந்தவர் எவன்ஸ் துரை அவர்கள். இலங்கை வித்தியாதிகாரியாய் விளங்கிய மாக்ரெபிசன்துரை அவர்கள் ஆசிரியர் கல்லூரி ஆசிரியர்களுள் ஒருவராய் இருந்தனர்.

அப்பொழுது தமிழ்ப்பண்டிதராய் இருந்தவர் தென்னக் கோவை பண்டிதர் கந்தையா பிள்ளை அவர்கள் ஆவர். இவர்களிடத்திலும் வித்துவான்

தாமோதரம்பிள்ளை அவர்களிடத்திலும், மதுரைத் தமிழ்ச் சங்க அங்கத்தினருள் ஒருவரும் வித்துவானும் ஆகிய முதலியார் சிற் கயிலாயபிள்ளை அவர்களிடத்திலும் மயில்வாகனனர் தமிழ் மொழியும், சைவ நூலும், சங்க நூலும் பயின்றுர். சுவாமிகள் சிலப்பதிகாரம் பயின்றது. 'வெள்ளியந் திருமலை கிழார்' ஆகிய சிற்.கயிலாயபிள்ளை முதலியாரிடத்தில் ஆசிரியப்பா, கலிப்பா, என்பவற்றைப் படிக்கும் முறையினை முதலியாரவர்கள் மயில்வாகனனர்க்கு நன்கு பயிற்றியுள்ளார்கள். மயில்வாகனனர் இரசாயன சாஸ்திரத்தை டாக்டர் ஜோசெவ் D. Sc அவர்களிடத்திலும் பயின்றுர். இவர் தாவர நூலும் உள நூலும் பயின்றது எவன்ஸ் துரை அவர்களிடத்தில். இங்ஙனம் ஆங்கிலமும் தமிழும் பயின்று கலைஞராய் விளங்கிய மயில்வாகனனர் 1916 ஆம் ஆண்டு மதுரைத்தமிழ்ச் சங்கப் பரீட்சைக்குப் பிரவேசித்துச் சித்தி எய்தினர்கள். இலங்கையிலிருந்து முதல்முதல் மதுரைச் தமிழ்ச் சங்கப் பண்டித பரீட்சையிற் சித்தி எய்தியவர் இவரே யாவர்.

முத்தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தர் அவர்களின் பிள்ளைத் திருநாமம் மயில்வாகனம் என்பது. செந்தமிழ், ஆங்கிலம், வடமொழி என்னும் மும்மொழிகளும் பயின்று கணித விஞ்ஞானத்துறையிலும் கருத்துடையராயிருந்த ஆசிரியர் மயில்வாகனனர் லண்டன் சர்வகலாசாலைப் பிரவேசப் பரீட்சையினையும் விரும்பி நின்றனர். சங்கத்தமிழ் பயின்றவராதலின் மேற்படி சர்வகலாசாலை மட்டிக்குலேஷன் பரீட்சைக்குத் தமிழினை ஒரு பாடமாகக் கொள்ளல் தமக்கு இழுக்காகும்

என எண்ணி ஆறுமாதகால வெஸ்லேயுள் லத்தீன் மொழியினைப் பயின்று 1916 ஆம் ஆண்டு ஜனவரி மாசப் பரீட்சையிற் சித்தி எய்தினர். அவர் சித்தி பெற்ற பாடங்கள் பின்வருமாறு: (English, Latin, mathematics, chemistry, heat, light and sound) ஆங்கிலம், லத்தீன், கணிதம், ரசாயன சாஸ்திரம், பௌதிக சாஸ்திரம் மேலும் இடைவிடாது பயின்று 1917 ஆம் ஆண்டு நடந்த 'இன்டர்மீடியற்' என்னும் மத்திய விஞ்ஞான பரீட்சையிற் சித்தி எய்தினர். பின்பு ஆசிரியர் மயில்வாகனனர் யாழ்ப்பாணத்தி லுள்ள திரு. பத்திரிசியார் கல்லூரியில் விஞ்ஞான சாஸ்திர ஆசிரியரானர்.

அவருடன் முதல் நட்புக்கொண்டவர்கள். பலருள் ஒருசிலர் திரு. க. நவரத்தினம் அவர்களும் திரு. M. மயில்வாகனம் அவர்களும், திரு. ரி. முத்துக்குமாரு அவர்களும் ஆவர். இவர்களும் இவர்களைப் போன்ற நண்பர்களும் சேர்ந்து விவேகானந்த சபை ஒன்றினை நிறுவினர். ஆனைப்பந்தியில் இருந்த அழகியவோர் இல்லத்தில் இச்சபை சிறப்பாக நடந்துவரலாயிற்று. அக்காலத்தில் நடந்த இந்து வாலிபர் சங்கம் விவேகானந்த சபை என்பனவற்றிற் பல செந்தமிழ்ப் பிரசங்கங்கள் புரிந்தவர் பண்டித மயில்வாகனனர் ஆவர். "பல்லுயிரும் பலவுலகும்" என்னுஞ் செய்யுளையும் "பாரதியார் பாடலையும்" யாழ்ப்பாணத்தில் பெருகப் பயிலச் செய்தவர் இவரே எனலாம். அக்காலத்தில் நிகழ்ந்த விவேகானந்த ஜயந்தி ஒன்றில் (1922) சிறியேனல் இயற்றப்பட்ட விவேகாநந்தப் பதிகம் பண்டித மயில்வாகனனர் முன்னிலை

யிற் படிக்கப்படலாயிற்று. அப்பொழுது பண்டித னூர் சிறியேன் மீது வைத்த அன்பே அவர் சிறி யேற்குத் தமிழ் உணர்ந்தற்குக் காரணமாயிற்று. அக்காலத்து வெளிவந்த ஆங்கில "இந்து சாதனத் திலும்" (Young Hindu) என்னும் இந்து வாலிபர் சங்க ஆங்கிலப் பத்திரிகையிலும் இவர் ஆங்கிலத் தில் எழுதிய அரிய விஷயங்கள் பல உலகியல் விளக்கும் பதிப்பிக்கப் பெற்றதும் இக்காலத்திலே யாகும். அக்காலத்திற் சுன்னாகத்திலிருந்த பெரும் புலவனாராகிய ஸ்ரீ அ. குமாரசாமிப் புலவர் அவர் களின் நட்பையும் பெறுவாராயினர் புலவர் அவர் களின் ஆராய்ச்சித் திறனையும் அன்பினையும் சுவாமிகள் பன்முறை கூறுவதுண்டு. சமயத் தொண்டும், தமிழ்த் தொண்டும் ஆற்றிவந்த மயில் வாகனனார் உயர்கலையையும் மறந்தாரல்லர். 1919-ம் ஆண்டு லண்டன் சர்வகலாசாலை விஞ்ஞான பண் டித் (B. Sc) பரீட்சையிற் சித்தியெய்தினர். அக்கா லத்து விளங்கிய விஞ்ஞான பண்டிதர் கள் சிலரேயாவர். தமிழிலும் விஞ்ஞானத் துறையிலும் விற்பன்னராய் விளங்கிய இவரே மானிப்பாய் இந்துக்கல்லூரித் தலைமை ஆசிரியரா தற்குத் தகுந்தவர் என்பதை உணர்ந்த நிருவாக சபையினர் பண்டிதர் அவர்களையே 'பிரின்சிப்பல்' ஆக நியமித்தனர். பண்டிதர் சாமித்தம்பி மயில் வாகனனார் B. Sc அவர்கள் கல்லூரித் தலைமை யினைத் தாங்கும் பொறுப்பையும் விஞ்ஞான சாஸ் திரம் கற்பிக்கும் பொறுப்பையும் ஏற்று விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சிச்சாலை ஒன்றினையும் ஏற்படுத் திப் பலதுறையிலும் கல்லூரி சிறப்பெய்துவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தார். இந்துக் கல்லூரி

முகாமைக்காரராகிய திருவிளங்கம் அவர்கள் இவர்கள்மீது பேரன்பு செலுத்தினர்கள்.

இக்கட்டத்தில் பண்டித மயில்வாகனனரின் ஆத்மீக வாழ்க்கைக்கு அரண்செய்த சிலரைக் குறிப்பிடுவது பொருத்தமாயிருக்கும். பண்டிதர் ஆனைப்பந்தியில் வாழ்ந்த காலத்திலேயே யோக சுவாமிகளுடன் தொடர்புகொண்டிருந்தார். இது பற்றி புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை கூறியிருப்பது பின்வருமாறு:- "முன்பெல்லாம் அகக்கண்ணால் கண்டு அன்புக்கிழமை பூண்டுள்ள எனக்கு 1917 ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் பண்டித மயில்வாகனனரின் நேர்முகக் காட்சி கிடைத்தது. ஆனைப்பந்தியில் அவர்கள் வசித்த வீடு ஒரு பொதியில் (பொது – இல்) போன்று காட்சியளித்தது. பெரிய படிப்பாளிகள், உயர்தரக் கல்விபெறும் இளைஞர்கள், பொதுநலத் தொண்டர்கள். பலர் அங்கு வருவார்கள். அரிதாகத் தரிசனம் அளிக்கும்போது சுவாமிகளும் அங்கு காட்சியளிப்பார்கள். சுவாமிகளின் அருள் நோக்கத்தால் அவ்வீடு புத்தொளியும், புதுமலர்ச்சியும் பெற்றுத் திகழ்ந்தது. சுவாமிகளுக்குப் பண்டிதர் மீது அளவுகடந்த கருணை. உள்ளிருக்கும் ஆன்மாவைக் கண்டுகொண்டார்.

யோகசுவாமிகளின் தொடர்பு, மானிப்பாய் இந்துக்கல்லூரிக்கு அதிபரானபின் அக்கல்லூரி முகாமையாளராயிருந்த திருவிளங்கத்தார் மூலம் வலுவடைந்தது. இதுபற்றிப் பண்டிதர் கூறியிருப்பது பின்வருமாறு:- (இது பிறர்கூற்ருக எழுதப்பட்டபோதிலும் இதனை எழுதியவர் பண்டிதரே

யென்று எனக்கு இதை உதவிய பீதாம்பரனூர் கூறியுள்ளார்) திருவிளங்கம் அவர்கள் குமாரக் கடவுளைத் தியான மூர்த்தியாகக் கொண்டு ஞானநு பூதியடைந்த மகான். பெரியார்களைக் காணவேண்டு மென்னும் பெருவிருப்பினையுடைய திருவிளங்கம் அவர்களை, ஆசிரியர் மயில்வாகனனூர் யாழ்ப்பாணம் கொழும்புத்துறையிலே பரமயோகீஸ்வரராக வீற் றிருக்கும் யோகசுவாமிகளிடம் அழைத்துச்சென் றூர். இரு பெரியார்களுக்கு மிடையில் இவ்வுலக எல்லையைக் கடந்த பேரன்பு நிலைபெற்றது.

அன்று முதல் மாணிப்பாய்த் தலைமையாசிரிய ராகிய பண்டித மயில்வாகனனூரின் விடுதி தேவ ரூபமாக மாறியது. கொழும்பிலிருந்து திருவிளங் கம் அவர்கள் வருகிற நாளிலே யோகசுவாமிகளும் நவாலியூர் தம்பையா உபாத்தியாயர் அவர்களும் மயில்வாகனனூரின் விடுதிக்கு வந்துவிடுவார்கள். இரவு முழுவதும் திருப்புகழ் பாடுகிற இசை, கேட் போரைப் பரவசமாக்கி குமார லோகத்துக்குக் கொண்டுசெல்லும். இந்த அனுபவத்தினைப் பூரண மாகப் பெற்ற மயில்வாகனனூரது சிந்தனை மேலும் மேலும் ஆத்மஞான வழியினை நாடி நிற்கின்றது.

பண்டிதர் மானிப்பாய் இந்துக் கல்லூரியில் அதிபராகவிருந்த காலத்தில்தான் இராமகிருஷ்ண சங்க மயிலாப்பூர் மடத்துக்குத் தலைவராகவிருந்த சுவாமி சர்வானந்தர் யாழ்ப்பாணம் வந்தார். இவர் ஓர் ஆஜானபாகு. கண்டோரை வசீகரிக்கும் தோற்ற முடையவர். சமஸ்கிருதத்திலும் ஆங்கிலத்திலும்

நிரம்பிய புலமையுடையவர். இவர்களின் தோற்ற மும் பேச்சுகளும் பண்டிதரை மிகவும் கவர்ந்தன. தமது வாழ்வின் இலட்சியத்தை நிறைவேற்றுதற்கு இவரை ஓர் உதாரண புருஷராகக் கண்டார். உரியகாலம் வரும்வரைக்கும் காத்திருந்தார்.

பண்டிதர் யாழ்ப்பாணத்தில் இருந்த காலத் தில் யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாபிவிருத் திச் சங்கத்தோடும் அதனோடு சம்பந்தப்பட்ட புல வர்களோடும் நெருங்கிய தொடர்பு வைத்திருந் தார். இவர்களில் ஒருவர் நவநீதகிருஷ்ண பாரதி யார். பாரதியார் எழுதிய "உலகியல் விளக்கம்" என்னும் நூலைப் பண்டிதர் அவர்கள் பதிப்பித் தார். இதற்கு ஒரு பதிகமும், ஆங்கிலத்தில் விமர் சனமும் எழுதினர்.

1922ஆம் ஆண்டில் இந்துக்கல்லூரி முகாமையா ளர் திருவிளங்கம் சிவபதமடைந்தார். இந்நிகழ்ச்சி நடைபெற்றதும் சுவாமிகள் நெடுங்காலமாக ஆலோ சித்துவந்த துறவு வாழ்க்கையை மேற்கொண் டார். துறவு வாழ்க்கையை மேற்கொண்டு இராம கிருஷ்ண சங்கத்தைச் சேர்ந்து பிரமச்சாரிய விரதம் பூண்டு பிரபோத சைதன்னியர் என்னும் நாமத் தில் தவவாழ்க்கையில் ஈடுபட்டார் இக்காலத்தில் மைலாப்பூர் இராமகிருஷ்ண சங்கம் நடாத்திவந்த 'இராமகிருஷ்ணவிஜயம்' என்னும் தமிழ்ச் சஞ்சிகைக் கும் 'வேதாந்த கேசரி' என்னும் ஆங்கிலச் சஞ்சி கைக்கும் ஆசிரியரானர். இவற்றில் தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறந்த கட்டுரைகள் எழுதினர். இவற்றேடு மதுரைத் தமிழ்ச் சங்கம் நடாத்திய

'செந்தமிழ்' பத்திரிகைக்கும் கட்டுரைகளை எழுதினர். இவ்வாறு நாடகத் தமிழ்பற்றி எழுதப்பட்ட கட்டுரைகளே பின்னர் 1926 ஆம் ஆண்டில் "மதங்க சூளாமணி" என்னும் பேரில் புத்தக வடிவில் மதுரைச் தமிழ்ச்சங்கத்தாரால் வெளியிடப்பட்டது.

1924 ஆம் ஆண்டு சித்திரை மாத பௌர்ணமியன்று பிரபோதசைதன்னியருக்கு சந்நியாச தீட்சை இராமகிருஷ்ண சங்க மடத்துத் தலைவர் சுவாமி சிவானந்தரால் வழங்கப்பட்டது. இவர் இத்தருணத்தில் பெற்ற தீட்சாநாமம் சுவாமி விபுலாநந்தரென்பதாகும்.

1925 ஆம் ஆண்டு சுவாமி விபுலானந்தர் இலங்கை வந்தபொழுது, இலங்கையின் பல பாகங்களிலும் வரவேற்புபசாரங்கள் நடைபெற்றன. இவற்றின் போது சுவாமிகள் சிறந்த சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

இலங்கையில் இராமகிருஷ்ண சங்கத்தின் ஆதரவில் நடைபெற்ற பாடசாலைகளுக்கு சுவாமிகள் முகாமையாளரானர். 1926 ஆம் 1927 ஆம் ஆண்டுகளில் திருக்கோணமலையைத் தமது வசிப்பிடமாகக் கொண்டு, திருக்கோணமலை இந்துக்கல்லூரியை விருத்திசெய்யும் நோக்கத்தோடு அதன் அதிபர் பதவியை ஏற்றார். இந்தக் காலத்திலேயே கொழும்பு விவேகானந்த சபையார் தொடங்கிய "விவேகானந்தன்" என்னும் பத்திரிகைக்கு முதலிருவருடங்கள் ஆசிரியராகவிருந்தார்.

1926 ஆம் ஆண்டில் இராமகிருஷ்ண சங்க வண்ணை வைத்தீஸ்வர வித்தியாலயத்தோடு சேர்ந்து ஒரு மாணவரில்லத்தை ஆரம்பித்தார். இவ்வில்லமே பின்னர் கல்லடி உப்போடைக்கு மாற்றப்பட்டு இப்பொழுது உன்னத வளர்ச்சியடைந்துள்ளது.

மட்டக்களப்பில் ஒரு சைவாங்கில பாடசாலை யில்லாத குறையைத் தீர்க்கும் பொருட்டு, கல்லடி உப்போடையில் சிவானந்த வித்தியாலயத்தை ஆரம்பித்தார். இவ்வித்தியாலயம் 1929 ஆம் ஆண்டு திறக்கப்பட்டது.

1927 ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் வாலிபர் மகா நாட்டுக்குத் தலைவராயிருந்து காந்தியடிகளை வரவேற்றார்.

1931 ஆம் ஆண்டு ராஜா சேர் அண்ணமலைச் செட்டியார் சிதம்பரத்தில் ஒரு பல்கலைக்கழகத்தை நிறுவி, அங்கு தமிழ்பகுதிக்கு ஒரு பேராசிரியரை நிய மிக்க ஒழுங்கு செய்தார். இப்பதவிக்கு சுவாமிகளே மிகவும் தகுதி வாய்ந்தவரெனக் கருதி, அவர்களை அப்பதவியை ஏற்கும்படி அழைத்தார். சுவாமி களும் இராம கிருஷ்ண சங்கத்தின் அனுமதியோடு அப்பதவியையேற்றார். இதனால், ஒரு சர்வகலா சாலையில் முதல் தமிழ்ப் பேராசிரியராக விருக்கும் பேறு பெற்றார். பேராசிரியராக இருந்த காலத்தில் தமிழ் இசை ஆராய்ச்சியிலும், சுவாமி விவேகானந்தர் நூல்களை தமிழில் மொழிபெயர்க்கும் பணியிலும் ஈடுபட்டார்.

•

இப்படிப் பேராசிரியராகவிருந்த காலத்தில் மறுபடியும் இலங்கையிலுள்ள இராமகிருஷ்ண சங்கப் பாடசாலைகளை நிர்வகிக்க வேண்டிய நிலையேற்பட்டது. இதனால் பேராசிரியர் பதவியைத் துறந்து இலங்கைக்கு வந்தார். இப்படி வந்த போதிலும் தமிழ்நாட்டோடு தொடர்பை வைத்துக்கொண்டிருந்தார். 1934 ஆம் ஆண்டில் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் அழைப்பை ஏற்று அதன் ஆண்டு விழாவுக்கு தலைமை வகித்தார் இதைத்தொடர்ந்து கரந்தைத் தமிழ்ச்சங்கத்தோடு நெருங்கிய உறவு வைத்து தாம் இசைத்தமிழ் பற்றி ஆராய்ந்து கண்ட முடிவுகளை அரசாங்க வெளியீடான "தமிழ்ப் பொழில்" மூலம் வெளியிட்டார். இச்சங்கமே பின்னர் யாழ்நூலை வெளியிடும் பேறுபெற்றது.

1935ஆம் ஆண்டில் திருவண்ணமலையில் நடைபெற்ற சைவ சித்தாந்த மகாசமாஜ ஆண்டுவிழாவுக்குத் தலைமை தாங்கினர்.

1936 ஆம் ஆண்டு பெப்ரவரி மாதத்தில் சென்னைச் சர்வகலாசாலை ஆதரவில் தமிழ் இசைபற்றி ஆறு சொற்பொழிவுகளை நிகழ்த்தினர்.

1936 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் சென்னை மாகாணத் தமிழர் சங்கத்தின் ஆதரவில் நடந்த கலைச்சொல்லாக்க மகாநாட்டுக்கு தலைமை தாங்கினர்.

இப்படிப் பல பணிகளில் ஈடுபட்டிருக்கும் காலத்தில் இராமகிருஷ்ண சங்கத்தார் தாங்கள் நடாத்தி வரும் "பிரபுத்த பாரத" என்னும் ஆங்கில சஞ்சிகைக்கு ஆசிரியராகவிருக்கும்படி பணித்தனர். அதன்

படி இமயமலைச்சாரலிலுள்ள அல்மோரா என்னு மிடத்திலுள்ள மடத்துக்குச் சென்றார். அப்பத்திரி கைக்குத் தமிழ் இலக்கியம், தமிழர் கலாசாரம் சம்பந்தமான பல கட்டுரைகளை ஆங்கிலத்தில் எழு தினர்.

அங்கு இரண்டாண்டு இருந்துவிட்ட பின்னரும் இலங்கை திரும்பினார். 1943-ம் ஆண்டு இலங்கைச் சர்வகலாசாலை ஏற்பட்டதும் சுவாமிகளை தமிழ்ப் பேராசிரியப் பதவியை ஏற்கும்படி அன்பர்கள் வேண்டினர். சுவாமிகளும் அதற்குடன்பட்டு அப் பதவியை யேற்றார். இலங்கைச் சர்வகலாசாலையில் தமது கடமைகளைச் செய்வதோடு யாழ் நூலை அச்சிடும் வேலையையும் கவனித்துவந்தார். இப்படி இருக்கும் காலத்தில் சுவாமிகளுக்கும் சுரமேற்பட் டது. சிறிதுகாலத்தில் நோய் குணப்பட்டபோதி லும் உடலில் ஏற்பட்ட தளர்ச்சி நீங்கவில்லை.

1947 ஆம் ஆண்டு யூன்மாதம் 5 ஆம் திகதி பல பெருமக்கள் மத்தியில் யாழ் நூல் அரங்கேற்றம் கும்பகோணத்துக்கு அருகிலுள்ள பாடல் பெற்ற தலமான திருக்கொள்ளம்பூதூரத்தில் நிறைவேறி யது.

யாழ்நூல் அரங்கேற்றத்தை முடித்துக்கொண்டு இலங்கை திரும்பியதும் மறுபடியும் சுவாமிகள் கடும் நோயுற்றார். கொழும்பு வைத்தியசாலையில் அனுமதிக்கப்பட்டு பலவிதமான வைத்தியம் செய் தும் நோய்குறையவில்லை. 1947 ஆம் ஆண்டு யூலாய் மாதம் 19 ஆந் திகதி இறைவன் திருவடி அடைந் தார்.

சுவாமிகளின் பூதவுடல் மட்டக்களப்புக்கு எடுத்துச் செல்லப்பட்டு, அவர் எழிதில் முயன்றெழுப்பிய சிவானந்த வித்தியாலயத்தில் சமாதி வைக்கப்பட்டது. சுவாமிகளின் சமாதிமீது பொறிக்கப்பட்டுள்ள அவர்கள் பாட்டில் ஒன்றைத் தந்து அவர் வரவேற்புக் குறிப்புக்களை நிறைவு செய்வாம்.

*வெள்ளை நிற மல்லிகையோ வேறெந்த மாமலரோ*
*வள்ள லடியிணைக்கு வாய்த்த மலரெதுவோ*
*வெள்ளை நிறப் பூவுமல்ல வேறெந்த மலருமல்ல*
*உள்ளக் கமலமடி உத்தமனூர் வேண்டுவது.*



ஓம்

# விபுலாநந்தர் உள்ளம்

## 1. தவம்

"தெய்வத்தா லாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்."

என நாயனுர் முயற்சியினது பெருமையைக் கூறினுர். முயற்சியே திருவினையாக்குவது. கர்ம யோகமென்னும் நூலினுள்ளே ஸ்ரீமத். விவேகானந்த சுவாமிகள் இவ்வுண்மையை விரிவுறக் கூறி விளக்கியிருக்கிருர். கருதிய பொருளெல்லாவற்றையும் எதனுற் பெறலாம்? தவத்திஞற் பெறலாம். இடையருத முயற்சியே தவமெனப்படுவது. வேண்டிய பொருள் அனைத்திணையுந் தருதலால் முயற்சியானது காம தேனு, கற்பகதரு, சிந்தாமணியென்னும் இந்திரச் செல்வங்களை நிகர்த்தது.

சூரபத்மன் தனது தவ முயற்சியினுல் இந்திரச் செல்வத்தினும் மிக்க திருவினைப் பெற்ருனன்ருே! யாது வேண்டுமோ அதனையெல்லாம் முயற்சியினுல் பெறலாம். விழைகின்ற பொருண்மேல் முழு மனத்தையுஞ் செலுத்தி முயற்சித்தலே சித்தி பெறுதற்குரிய வழியாகும். யாம் விழைகின்ற பொருள் இதுவென்பதைத் தெளிவாக நிச்சயித்துக் கொள்ளல் வேண்டும். போகத்தை விழைந்தோர் போகத்தைப் பெறுவர். மோக்ஷத்தை விழைந்தோர் மோக்ஷத்தைப் பெறுவர்.

காசிப முனிவன் தனது புதல்வராகிய சூரனாதி யோருக்குப் பேரானந்தப் பெருவாழ்வாகிய மோக்ஷத்தையடையும் மார்க்கத்தை உபதேசித்த சமயத்தில்,

" தவந்தனின் மிக்கதோன் றில்லைத் தாவில்சீர்த்
தவந்தனை நேர்வது தானு மில்லையாற்
றவந்தனி னரியதோன் றில்லை சாற்றிடிற்
றவந்தனக் கொப்பது தவம தாகுமே."

எனத் தவத்தின் மகிமையை வற்புறுத்திக் கூறினான். அத்தவம் இம்மை மறுமைப் பயன் இரண்டினையுந் தரவல்லது. காசிபன் மறுமைப் பயனைப் பாராட்டிக் கூறினன். அருகிருந்த மாயவள் நகைத்து,

" மறைதெரி முனிவநீ வாய்மை யாகிய
உறுதியை மொழிந்தனை யுயர்ந்த வீடுறும்
அறிவுடை முனிவரர்க் கன்றி நாமருள்
சிறுவருக் கித்திறஞ் செப்ப லாகுமோ?"

வேதங்களை ஓதியுணர்ந்த முனிவரே, நீர் உண்மையான சாதனத்தையே சொன்னீர். உயர்ந்த முத்தியை அடையுங் கருத்தினையுடைய முனிவர்களுக்கேயல்லாமல், நாங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு இவ்வாறு சொல்லுவது தகுமா?

" நன்பெருஞ் செல்வமு நவையில் கொற்றமு
மின்பமு மழிவிலா திருக்கு மாயுளு
மன்பெருஞ் சீர்த்தியு மறுவில் வாழ்க்கையும்
அன்புடை யினையவ ரடைதல் வேண்டுமால்."

"நல்ல பெருஞ் செல்வத்தையும் குற்றமற்ற வெற்றியையும் போகானுபவத்தையும் அழியாதிருக்கின்ற ஆயுளையும், நிலைபெற்ற பெரிய கீர்த்தியையும், குற்றமற்ற வாழ்வையும், நம்மாட் டன்புள்ளவர்களாகிய இவர்கள் பெறுதல் வேண்டும்" எனக் கூறி, ஆங்கதற்குரிய வழிவகைகளையும் எடுத்தியம்பினள். தாய்மொழி மேற்கொண்டு நின்ற சூரனாதியோர் மாயவள் உரைத்த செல்வம் அனைத்தினையும் பெற்றனர். எதனாற் பெற்றனர்? தந்தை கூறிய தவத்தின் வலிமையாற் பெற்றனர். தவமே இம்மை மறுமைப் பயன் இரண்டினையுந் தரவல்லது.

---

## 2. ஆன்ம சக்தி

பிரபஞ்ச மனைத்தினும் வியாபித்து நிற்கின்ற திருவருட் சக்தியின் ஒரு கூறாக அமைந்துள்ளது, நம்முள்ளே நின்று நம்மையியக்கித் தொழில் புரிவிக்கும் ஆன்ம சக்தி. இவ்வான்ம சக்தியினது சூட்சுமத்தை யறிந்த யோகி, செய்யுங் கருமமனைத்தினையுஞ் சீர்பொருந்தச் செய்யும் ஆற்றலுடையவனாவான். ஆன்ம சக்தி எந்நீர்மையது? அதனைக் கொண்டு தொழில் புரிவிக்கும் மார்க்கம் யாது? இவ்வினாக்கள் பெருக்கவாராய்ந்து முடிவு செய்யற்பாலன. இவற்றைச் சுருக்கமாக விசாரிக்கப் புகுந்த யாம் முதலிலே மனோதத்துவ சாஸ்திரத்திற் கண்ட முடிபுகள் சிலவற்றை யெடுத்தியம்பி யப்பாற் செல்வாம்.

மனம் யாதொன்றினை அவாவி நிற்கின்றதோ அப்பொருளினைச் சதா சிந்திக்கின்றது. சிந்திக்கும் பொருளினது உருவம் மனக்கண் முன்னே புலப்பட அதனைப் பெறுதற்குரிய வழிவகைகளைச் சித்தம் நிச்சயப்படுத்துகின்றது. சித்தத்திற் சிரத்தை மீதூர ஆரம்பத்திற்றோன்றிய விழைவானது தன்னைத்தானே நிறைவிக்கின்ற விழைவு நிறைவுமுயற்சியாகப் பரிண மிக்கிறது. தோல்வியினாற் சோர்வடையாமலும், வெற்றியினால் மிதமிஞ்சிய குதூகலமடையாமலும் என்றும் ஒருபடித்தாகக் கருமமே கண்ணாகவிருக்கும் நிலையே சிரத்தையெனப்படுவது. சிரத்தையுடையார் செயற்கருஞ் செய்கைகளைச் செய்வார். இவரே பெரியரெனப்படுவார். 'யான் செய்கின்றேன்' என்னும் முனைப்பு உள்ளத்தில் நிலைத்திருக்கும் வரையும் வெற்றி தோல்வியினால் எய்தற்பாலனவாகிய இன்ப துன்பங்கள் உள்ளத்தை அலைக்காமல் விடமாட்டா. செய்யும் பணியெல்லாம் இறைபணியென்னும் உண்மையுணர்ச்சியினால், எய்பவன் அவன்; அம்பு யாம் என்றறிந்து, "என் கடன் பணி செய்து கிடப்பதே" யென்று அருமறை யாகமங்களுக்கு மாறுதலை யாகாத உத்தம முயற்சிகளிற் தலையிட்டு நிற்போர் இன்ப துன்பங்களால் அலைவுறமாட்டார். சிரத்தை நிறைந்த உள்ளத்தராகிய இவர் தாம் விழைந்த நற் கருமங்களைச் செய்து நிறைவேற்றுவார். வெற்றி தோல்வியினால் அலைவுறாத உள்ளத்தில் ஆன்மசக்தி அதிகரிக்கின்றது.

எல்லா நன்மைகளுக்கும் உறைவிடமான இறைவனது பொன்னடிமலரிற் பதிந்து கிடக்கின்ற உள்ளம் தீமையினீங்கி நன்மையைப் பெருக்குகின்றது.

இடைவிடாத நல்லெண்ணமுளதாய வழிச் செய்கின்ற கிரியையனைத்தும் நற்கிரியையாகின்றது. ஆதலால், சித்த சுத்தியோடு நல்லெண்ணங்களினால் நமது உள்ளத்தை நிரப்புதல் வேண்டும்.

சம நிலையோடு கூடிநின்று கருமமியற்றுங்கால் எடுத்த கருமத்தை யிடைவிடாது தொடர்ந்து செய்தல் வேண்டும். "எறும்பூரக் கற்குழியும்" என்றபடி இடைவிடாத முயற்சியினாலே செயற்கரியவற்றைச் செய்யலாமென்பதற் கையமில்லை.

சாந்தம், பொறுமை, தயையென்னும் நற்குணங்கள் எடுத்தது முடிக்கும் ஆற்றல் சான்றன. அமைதி நிலையில் நிற்கும் ஞானி புறத்தொழில் செய்யாதவன்போற் காணப்படினும் அவனிடத்திருந்துதிக்கும் நன்மைக்கோரளவில்லை. லௌகிகக் கவலையுட் பட்டலைவுறும் மாந்தர் திரைகடலி லலைவுறும் மரக்கலமனையார். நங்கூரம் போன்ற நிலை நிறுத்தும் ஆற்றல் ஞானிக்குண்டு. இவ்வாற்றலை ஞானி மௌனத்தினாற் பெறுகின்றான். மௌனமென்பது உரையாடாதிருக்கு மொன்று மாத்திரமன்று. மனம், மொழி, மெய் ஆகிய மூன்றும் சம நிலையில் நிற்பதே உண்மையான மௌனமாகும்.

அதிகப் பிரசங்கி கரும முடிக்கமாட்டான். தோல்வி வந்தபோது சோர்வடைபவன் கரும முடிக்க மாட்டான்; வெற்றியினால் நிலை கலங்கினோன் கரும முடிக்கமாட்டான்; காமம், வெகுளி மயக்கத்தினால் அலைவுற்று நிலை கலங்கினோன் கரும முடிக்கமாட்டான்; ஆரம்பித்ததை இடையில் விட்

டயர்கின்ற சோம்பேறி கருமம் முடிக்கமாட்டான். இறைவனுடைய திருவடியைச் சிந்தையுள் வைத்து சிரத்தைதமீதூர்ந்த உள்ளத்தனாய், இன்ப துன்பங்களினால் அலைவுறாது காமம், வெகுளி, மயக்கத்தை நீக்கிச் சாந்தம், பொறுமை, தயையென்னும் நற்குணங்களைப் பூண்டு நிற்போன் ஆன்மசக்தி நிறைவினாலே செயற்கரியனவற்றைச் செய்து முடிப்பானென்பது இவ்வாராய்ச்சியாற் கண்ட முடிபாகும்.

---

# 3. தைத்திங்கட் பிறப்பு

"அலைமோதுகின்ற கடலானது பொங்கி ஆரவாரிக்கின்றது; சங்கினங்கள் ஒலிக்கின்றன; கோழியுங் கூவிற்று; விடியற்காலமாய்விட்டது; சூரியன் கிழக்குத் திசையில் தோன்றுகிறான்; தொண்டர்கள் நின்னைத் துதிக்கும் வண்ணம் ஒன்றுகூடிவந்து நிற்கின்றனர்; அறுமுகப் பெருமானே, வருவீராக; உண்மையற்புதரே, வருவீராக; பொன்போன்று செஞ்சுடர் பரப்பும் வேற்படைக்கலத்தை யேந்தியவரே, வருவீராக; மின்போன்ற முப்புரி நூலணிந்தவரே வருவீராக; சூரனைச் சங்கரித்த தீரரே, வருவீராக; வீரத்தை அணிகலமாகப் புனைந்த வீரசிங்காரரே, வருவீராக" என்று கவி காலைப்பொழுதிலே சுப்பிரமணியப் பெருமானை வழுத்துகின்றார். தேவர்களுக்கு விடியற்காலமாகிய தைத்திங்கட் பிறப்பிலே யாமும் தேவசேனாபதியாகிய முருக முதல்வனது திருவடித்

தாமரைகளைச் சிரத்திற் சூடி வாயார வாழ்த்திச் சிந்தை நைந்துருகி இம்மை மறுமைப் பயனைப் பெறுவோமாக.

காலைப்பொழுது கடவுளை வழிபடுவதற்குச்சிறந்த காலமாகும். எவ்விடத்தும் நிறைவு; யாங்கணுங் குளிர்ச்சி; தடாகத்திற் பூத்த கமலம் மலர்வது போல் இருதயமாகிய கமலமும் அலர்வதற்குரிய நேரம். ஆதி சிருஷ்டிக்காலத்திற் பிரமதேவன் சர்வ உலோகங்களையும் படைத்த மாத்திரத்திலே எத் திசையினின்றும் உவகையொலி யெழுந்ததன்மை போல விலங்கினங்களும் பறவைக் கூட்டங்களும் உவகை நிறைந்த ஒலியைத் தருகின்றன. ஆறறிவுடையராகிய மக்கள் மாத்திரம் சோம்பலுற்றிருப்பது முறையாகுமா?

செங்கதிர்ச் செல்வன் வடபாலைநோக்கும் தைத் திங்கட்பிறப்பைத் தேவர்களுக்கு விடியற்கால மென்பர். ஆதலின் இது சிறந்த புண்ணிய காலமாயிற்று. நாள் முழுவதும் நாம் செய்கின்ற கருமங்களுக்கு விடியற்காலத்தில் ஆரம்பிக்கும் ஆரம்பம் ஆதாரமாக அமைந்து நின்ற தன்மைபோல ஆண்டு முழுவதும் செய்கின்ற கருமங்களுக்குத் தைத்திங்களிலெடுத்துக்கொண்ட ஆரம்பம் ஆதாரமாமென்பது, "ஆரம்பம் நன்றுமெனிற் பாதி கைவந்த"தெனக் கூறும் ஆங்கிலப் பழமொழியின் உறுதி ஈண்டு ஆராயத்தக்கது. செய்யுங் கருமமெல்லாம் சிவனுக் கர்ப்பணமெனத் தம் வாழ்க்கையைச் சீர்ப்படுத்தும் அறிவுடையோர் எப்பணியைச் செய்யினும் அதை இறைபணியாகக் கொண்டு அவனது பெருங்கரு

ணைத் திறத்தை வேண்டிநிற்பர். இத் தைத்திங்கட் பிறப்பிலே நாம் சிந்தையிற் சங்கற்பிக்கின்ற நற் கருமங்களுக்குத் தேவ சேனாபதியாகிய சண்முகக் கடவுள் திருவருள் பாலிப்பாராக.

கலியுக வரதராகிய சுப்பிரமணியப் பெருமான் நமது தமிழ்த் தெய்வம்; நமக்கு வேண்டுவன வற்றை அநுக்கிரகிப்பவர்; போக, மோக்ஷமாகிய இரண்டினுக்குந் தலைவர்; அஞ்ஞானமாகிய இரு ளினைக் கடிந்து ஞானவொளியைத் தரும் பரமா சாரியர். ஆதலினாலே நாம் நமக்காகவும் பிறர்க்காக வும் செய்யவெண்ணிச் சங்கற்பிக்கின்ற நற்கரும மனைத்தினுக்கும் சுப்பிரமணியப் பெருமானது நல் லருளைத் துணையாகக் கொள்ளுவோமாக. சூரனு லிடருற்ற தேவர்கள் அந்தகாரமாகிய பேரிரு ளிடைப்பட்டுத் துன்புறுங்கால்,

**"நண்ணினர்க் கினியா யோலம் ஞானநா யகனே யோலம்**
**பண்ணவர்க் கிறையே யோலம் பரஞ்சுட ருருவே யோலம்**
**எண்ணுநற் கரியா யோலம் யாவையும் படைத்தாயோலம்**
**கண்ணுநற் பெருமா னல்கும் கடவுளே யோல மோலம்"**

எனத் துதித்துத் துன்பநீங்கி யின்புற்றனர்.

பலவகைப்பட்ட இன்னலாலும் நெருக்குண்டு நிலைகலங்கியிருக்கும் நமது சமூக வாழ்க்கையை நோக்குங்கால், நமது நிலை சூரனாதியோராற் துன் புற்ற தேவர் நிலையினும் மிகக் கொடிது. நமது இழிவு இத்தகையதென்று உணருகிற உணர்ச்சி தானும் நம்மவருக்கில்லை, இத்தகைய பரிதபிக்கத் தக்க நிலையினிற்போராகிய யாம் எமது தெய்வ

மாகிய முருகனிடம் முறையிட்டு அவனுடைய பெருங் கருணையினால் மனத்தில் உற்சாகமெய்தப் பெற்று நம்மையுஞ் சீர்ப்படுத்தி நம்மைச் சார்ந்த பிறரையுஞ் சீர்ப்படுத்துவோமாக.

---

## 4. சைவச்சிறுரின் கல்வி

"ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனுர், பால தாமினே" — தேவாரம்

ஆற்ருெணுத் துன்பம் வந்துற்றகாலை அதனை மாற்றுதற்கு வழியறியாது திகைக்கும் உள்ளமானது ஆன்ம நாயகனாகிய இறைவனது திருவடிகளை இயல்பாகவே நாடிநிற்கின்றது.

"சுருதிப் பொருளின் துணிபினை யறியாமையாற் துன்புற்றுவாடிய முனிவர்மீது கருணைகூர்ந்து தென்முகக் கடவுளாய்க் கல்லால விருக்ஷத்தி னீழலிலிருந்து உண்மையை யுணர்த்தி யருளியவனும், தென்பாண்டி நாட்டாரது அல்லலெல்லாம் நீங்கும் பொருட்டு மணிமுடி கவித்துச் செங்கோலோச்சி மதுரைத்திருப்பதியை யாண்டருளியவனும், தவத்தின் மிக்க மார்க்கண்டன் பொருட்டாகக் காலனை யுதைத்தவனுமாகிய கருணையங்கடவுள் ஒருவனுளன். அவன் தன்னை நாடினேரது துன்பத்தைக் களைபவன். மல்லன்மா ஞாலத்து அல்லலுற்றலையும் மாந்தர்களே! அக்கடவுளது மெல்லென்ற திருவடியையடைந்து துக்கநிவர்த்தி யடைவீர்களாக" என்று இத்தேவாரத் திருச்செய்யுள் துக்கநிவர்த்திக்கு ஆவதோர் உபாயங் கூறிற்று.

இந்நாளில் எமது சாகியத்தாருக்கு நேரிட்டிருக்கின்ற துன்பங்களோ மிகப்பல. அவற்றின் நீர்மையை அறிந்தார் சிலர்; அறியாதார் மிகச்சிலர். துன்பத்தைத் துன்பமென்றறியாது சுகமென நினைத்து ஏமாந்திருப்போர் ஒருசாரார்; துன்பத்தைத் துன்பமென்றறிந்தும் அதனை நீக்குதற்கு வழிதேடாது சோம்பலுற்றிருப்போர் ஒருசாரார்; எஞ்சாகியத்தாரது நிலை சிறைவாய்ப்பட்டு, இழிதொழில் புரிந்த தேவர் நிலைக்கு ஒப்பாவதெனத் தேசாபிமானிகள் பலர் பேசுகின்றனர். எமது ஜனசங்க வாழ்க்கையிலுள்ள இழுக்குகள் மிகப்பல. இவையனைத்தும் நீங்கி யாமுய்யும்பொருட்டுக் கருணையங்கடலாகிய இறைவனை வழிபடவேண்டுமென்பது அறிஞர் பலரது உள்ளக்கிடக்கை. வாழ்க்கையிலுள்ள குறைகளுட் பல நெறிதவறிய கல்விமுறையாலாயினவாதலின், அக் கல்வி முறையைத் திருத்த அனைத்துந் திருந்துமென்று கூறி அதற்காகப் பெரியார் பலர் பலப்பல நன்முயற்சிகளைச் செய்துவருகின்றனர். இம்முயற்சிகளின் நோக்கத்தினைச் சுருக்கமாக ஆராய்ந்துணர்வோமாக,

கல்வி முறையைத் திருத்த வேண்டுமென்னுங் கருத்தானது சட்டமமைக்கும் மந்திராலோசனைச் சபையிலும் தேசபக்தர் குழுமிய பிரசங்க மேடைகளிலும், வித்தியா மண்டபங்களிலும், வேற்றிடங்களிலும் ஆராயப்பட்டு வருகின்றது. அங்ஙனம் ஆராயும் ஆராய்ச்சிதான் பலவகைய. சிறுவருக்கு அறிவுநூல் பயிற்றுவது அவர்தந் தாய்மொழியிலா? அன்றேல் பிறமொழியிலா? என்பது ஓர் ஆராய்ச்சி.

ஐரோப்பிய பாதிரிமார் நடத்திவரும் கலாசாலை களிற் சைவப்பாலியர் படித்தல் முறையாகுமா, முறையாகாதா என்பது மற்றேராராய்ச்சி. சைவப் பாலியர் சைவவித்தியாசாலையை யடைந்து சிவநெறி நிற்கும் நல்லாசிரியரிடத்துத் தந் தாய்மொழியிலே அறிவுநூலைக் கற்கவேண்டுமென்பது அறிஞரனைவ ருக்குமொப்ப முடிந்த முடிபாதலின், மேற்போந்த ஆராய்ச்சிகள் வெற்ருராய்ச்சிகளாமென்ப தொருதலை.

விழுப்பத்தைத் தருகின்ற ஒழுக்கத்தை விருத்தி செய்யுங் கல்வியே கல்வி; ஏனைய கல்வி கல்வி யெனப்படமாட்டாது. ஒழுக்கம நூற்கல்வியால் மாத்திரம் எய்தப்படுவதொன்றல்ல. நல்லாசிரியரும் நன்மாணக்கரும் ஒன்றுசேர்ந்து உடனுறையுங் குரு குல வாசங்களில் நித்திய கர்மானுஷ்டானம் பிரம்மச் சரியம் முதலிய ஏற்பாடுகளினுல் நல்லொழுக்கம் வளர்ச்சியெய்துகின்றது. அத்தகைய குருகுல வாசங்களே உண்மைக் கல்வி நிலையங்களாகக் கரு தப்படத்தக்கன.

கடவுட்பக்தியும் நற்குண நற்செய்கையும் தியாக புத்தியுமுடைய ஆசிரியர்களே தமது மாணவ ரிடத்து நல்லொழுக்கத்தை விருத்திசெய்யும் ஆற் றல் சான்றவராவர். மனோபலத்துக்குத் தேகபலம் இன்றியமையாதது. இவ்விரண்டினுக்கும் பிரமச்சரி யம் இன்றியமையாதது. வித்தியார்த்திகளது தேக மும் மனமும் பலமடையும்படி அவர்களைப் பிரமச்சரிய நெறியில் ஒழுகும்படி செய்யவேண்டும்.

அறிவுநூற் கலைகளை ஆராய்வோடு கற்றற்கு மொழிவளம் நிரம்பியிருக்கவேண்டுமாதலின், தாய் மொழியிலுள்ள இலக்கண இலக்கியங்களை ஐயந் திரிபற ஆராய்ந்து சிந்தனைத் தெளிவும் வாக்குத் தெளிவுமுடையராதல் வித்தியார்த்திகளது முதல் நோக்கமாகவிருத்தல்வேண்டும். பல சிறப்புபட்ட பாஷைகளைக் கற்பதனால் அறிவு விசாலிக்குமாதலி னாலே தாய்மொழியில் ஒருவாறு தேர்ச்சியெய்திய மாணவனுக்குப் பிறமொழிகளையும், அவற்றிலுள்ள அறிவுநூல்களையுங் கற்பித்துவைக்கலாம். கணிதம் தருக்கம் முதலியன நுண்ணறிவினை விருத்தி செய் வனவாதலின் அவற்றிற் பயில்வது இன்றியமை யாதது. வைதிக சைவத்துக்குரிய ஆதார நூல்க ளனைத்தும் வடமொழியிலிருத்தலினாலே வடமொழிப் பயிற்சி சைவ மாணவருக்கு இன்றியமையாதது.

நமது பாலியருடைய கல்விக்காக வேண்டிய முயற்சிகளை நாமே செய்யவேண்டும். அந்நிய மதத் தினருடைய ஆதரவை நாடி நிற்பது முறையாகாது. சைவாசாரியர்களும், சைவப்பிரபுக்களும், சமயாபி மானம், பாஷாபிமானம், தேசாபிமானம் மிக்க சைவ நன்மக்களும் சைவக்கல்வியின் வளர்ச்சிக்காக முயற் சிக்கவேண்டும். தியாக சிந்தையுடைய முதியோர் முன்மாதிரியாயிருப்ப, அவரைப் பின்பற்றியொழுகும் இளையோர் தேசத்திருப்பணி யியற்றுவாரெனின் நாடு நலமடையும் என்பதற்கையமில்லை.

---

# 5. அறிவாகிய விளக்கு

தீபம் ஒளியைத் தருகின்றது. மழைக்காலிருட்டில் வழிச்செல்வோரது கையிலே தீபமிருக்குமானல் அவர்கள் அச்சமின்றி நடப்பார்கள். கையில் விளக்கில்லாதவன் கானக வழியில் நடந்து செல்லும்போது "சர, சர" என்பதோர் அரவங் கேட்டால் பேயோ, பிசாசோ, புலி கரடியோ தன்னைப் பிடிக்க வருவதாக நினைத்து! அச்சமுறுவான் கையில் விளக்கிருப்பவன் அதன் கிரணங்களை அரவம் எழுந்த திசையை நோக்கி நீட்டி உண்மையை உணர்ந்துகொள்ளுவான். "சர, சர" என்னுஞ் சத்தமுண்டானது பேய் பிசாசினலல்ல, புலி கரடியினலல்ல, தன்னைக்கண் டஞ்சியோடுகின்ற ஒரு குள்ள நரியின் காலடியின லென்பதை யுணர்ந்து தன்னுள்ளே நகைப்பான். நரியைப் புலியென்றெண்ணிய மயக்கவுணர்வினல் அச்சமுண்டாயிற்று; நரியை நரியென்றுணர்ந்த உண்மையுணர்வினல் அச்சம் நீங்கிற்று. உண்மையுணர்விற்குத் தீபத்தினெளி காரணமாயிற்று.

உலகம் இருளடர்ந்த கானகத்தை நிகர்த்தது. மானிடராகிய யாமெல்லாம் ஆங்கு வழிச்செல்லுகின்ற பிரயாணிகளுக்கு ஒப்பாவோம். மெய்யறிவு தீபத்தை நிகர்த்தது. ஞானமில்லாதவன் விளக்கில்லாது வழிச்செல்லுகின்ற மூடனைப்போல அஞ்சவேண்டாதனவற்றுக்கெல்லாம் அஞ்சுவான். ஞானவான் உண்மையுணர்வாகிய ஒளி விளக்கத்தினல் கரும நிகழ்ச்சிகளின் காரணங்களை யுள்ளவாறுணர்ந்து "அஞ்சுவதியாதொன்றுமில்லை, அஞ்ச

வருவதுமில்லை" என்று திடசித்தத்தோடு வாழ்க்கையாகிய வழியைத் தொலைப்பான். அச்சத்துக்குக் காரணம் அஞ்ஞானம் "அஞ்சினவன் கண்ணுக்கு ஆகாசமெல்லாம் பைசாசம்" என்ற பழமொழியின்படி பயந்தவனைத் துன்பம் என்னும் பைசாசு வந்து பற்றிக்கொள்ளுகிறது. அஞ்ஞானத்தினால் தான் அல்லாதவற்றைத் தான் என்றும், தனது அல்லாதவற்றை தனது என்றும் எண்ணுவதினாலே துன்பம் வந்து எய்துகின்றது. அச்சங்களுள் மிக்கது மரணபயமென்ப. இவ்வுலகத்தையும் புலன்களுக்கு இன்பம் பயக்கும் போக வஸ்துக்களையும், சுற்ற மித்திரரையும், மனைவி மக்களையும் உடலையும் தனதென்றெண்ணியிருந்த மானிடன் மரணம் வந்தெய்து மெல்லையில் இவற்றையெல்லாந் துறக்க நேரிடுகின்றதேயென்றெண்ணித் துன்புறுகின்றான். பொய்ப்பொருளாகிய இவையெல்லாம் சதமல்ல என்பதை முன்னமேயறிந்த ஞானி உடலை விடவேண்டிய நேரத்திற் பஞ்சபூதக் கட்டையாகிய பாரந் தொலைகின்றதே யென்றெண்ணி ஆனந்தமுறுவானேயன்றிச் சிறிதேனுந் துன்புறமாட்டான்.

நோய், மூப்பு, சாக்காடு என்னும் மூன்றும் அறிஞர் அறிவிலிகள் ஆகிய இருபாலாருக்கும் நேர்கின்றனவே; அங்ஙனமாதலின் ஞானிகள் மாத்திரம் மரணத்தைக் கடந்தவரென்று கூறுவது யாங்ஙனம் பொருந்துமென்று ஒருசாரார் ஐயுறுதல் கூடும். தேகத்தைப் பொய்யெனவுணர்ந்து, ஆன்மஞானத்தில் நிலைபெற்றுநின்ற ஞானி தேகத்தை விட்டகலும்போது துன்புறுவதில்லை; தேகமே தானென்றெண்ணிய மூடன் துன்புறாதிருப்பதில்லை.

இதுவே இவ்விருபாலாருக்குமிடையிலுள்ள வேறு பாடு. உடல்மூப்புறினும் உள்ளம் இளமை மாரு திருக்குமியல்பு ஞானிக்கு உண்டு. உடலம் நோய் வாய்ப்படினும் உளங் கலங்காது ஆனந்தத்தில் நிலை பெற்றிருக்கும் ஞானி நோயினுல் ஏற்படுந் துன் பத்தையடைவதில்லை. அஞ்ஞானிக்குத் துயரத்தை விளைக்கும் நோய், மூப்பு, சாக்காடு என்னும் மூன் றும் ஞானியைச் சாராவென்பது முடிபாகின்றது.

அறிவாகிய விளக்கு வரும்போது அவித்தை யாகிய பொய்யிருள் இருந்தவிடந்தானும் இல்லாது மறைந்தொழியும்; தேடினுலுமகப்படாது. அறி வாய் நின்றவிடத்து அறியாமையேதுமில்லையென்று வேதவாக்கியங் கூறும். இக்கருத்தேபற்றித் தாயுமான சுவாமிகளும்,

"போத மென்பதே விளக்கொவ்வு மவித்தை பொய் நீதிலா விளக்கெடுத்திரு டேடவுஞ் சிக்கா [யிருளாந்
தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
ஏது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்"

அறிவைப்பெறின் அறியாமையும் அதன்வழி வந்த துன்பமும் உடனகல்வவாதலின், எப்பொருளினும் மிக்க அறிவுப்பொருளை விழைந்து தேடுதல் வேண் டும்.

கடவுளுடைய சொருபத்தை யுரைக்கும் மெய்ம் மறை கடவுளை அன்புருவன், அறிவுருவன், ஆனந்த வுருவன் எனக் கூறுநிற்கும். அறிவு நிரம்பிய விடத்து ஆனந்தந்தானே நிரம்புமாதலின், அறி வுருவனைச் சார்ந்தோர் ஆனந்தத்தை யடைவாரென்

பது. இனி, கற்றதனாலாய பயனும் வாலறிவனது நற்றாளைத் தொழுதலினாலே யெய்தற்பாலதேயன்றிப் பிறவாற்றா னெய்தற்பால தொன்றன்று. மனை, மக்கள், பொருட்செல்வம் என்னும் இவற்றை நாடுவோர் அவற்றால் இன்பம் வந்தெய்துமென் றெண்ணியே நாடுகின்றனர்; கானல் நீர்போலத் தோன்றி யழிகின்ற அழிவுடைய பொருள்களால் எய்தற்பாலது துன்பமேயன்றிச் சுகமல்லவென்பதை உண்மை ஞானிகள் நன்றாக அறிவர். அன்னோர் உலகவாழ்க்கையில் மேவியிருப்பினும் அறிவுச் சுடரோடு பொருந்தியிருப்பாராதலின் உலக மாயையாகிய குள்ளநரியின் அரவத்துக்குச் சிறிதேனும் அஞ்சமாட்டார்.

---

# 6. சந்திரன் அறிவிக்கும் உண்மை

சித்திரை மாதத்திலே நிறைந்த கலைகளையுடைய சந்திரன் சித்திரை நக்ஷத்திரத்தோடு கூடிநிற்கும் உத்தம தினத்திலே குளிர்ந்த கிரணங்களைப் பரப்பி உலகுக்கு மகிழ்ச்சியைத் தருகின்ற சந்திர மண்டலத்தைப்பற்றிய எண்ணங்கள் இயல்பாகவே உள்ளத்து எழுகின்றன. முதுகண்ணன் சாத்தனார் என்னுந் தமிழ்ப் புலவர் சோழன் நலங்கிள்ளியைப் பாடிய முதுமொழிக் காஞ்சிச் செய்யுளினுள்ளே,

"தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து."

என்று கூறியவழித் திங்களாகிய தெய்வம் கல்வி முகத்தா லறியாதோராகிய மடவோருக்கும் உறுதி பயக்கும் உண்மையை அறிவிக்கின்றதென்று கூறினர். சந்திரன் உலகுக்கு அறிவிக்கும் உண்மை நால்வகைய:- ஒன்று, தேய்தலுண்மை; மற்றொன்று பெருகலுண்மை; மற்றொன்று மாய்தலுண்மை; மற்றொன்று பிறத்தலுண்மை.

நிறைந்த கலைகளோடு விளங்கிய சந்திரன் சிறிது சிறிதாகக் கலைகுறைந்து ஒளி மழுங்கித் தோற்றுவானாகலின் இளமை, செல்வம், வனப்பு என்னு மிவற்றின் நிறைவினால் ஏமாப்புறுதல் சாலாது. ஏனெனில் அந்நிறைவு காலகதியில் சுருங்குதல் இவ்வுலகத் தியல்பு. இது தேய்தலுண்மை. செல்வம் முதலியவற்றாற் குறைவுபாடுடையோர் துன்புற்று வருந்தல் வேண்டா. கலை குறைந்த மதியம் நாளடைவிற் கலை நிறைந்து விளங்கக் காண்கின்றோ மாதலின், வறியராயினர் செல்வராவர் என்னும் உண்மை புலப்படுகின்றது. இது பெருகலுண்மை. "இந்நிலவுலகுக்கு மகிழ்ச்சியையும் விளக்கத்தையு மளித்த சந்திரன்றானும் தன் காலகதியில் மாய்ந்தொழிகின்றான்; ஆதலால் அன்பானும் அறிவானும் நிறைவுற்று உலகுக்குப் பெரும்பயன் விளைய வாழ்ந்துவரும் நல்லோர் தாமும் தமது காலவிறுதி

யில் உயிர்துறப்பார். இது மாய்தலுண்மை. மாய்ந்த சந்திரன் மீட்டும் பிறக்கக் காண்கின்ளேம். அதுபோல வினைவயத்தா லெடுத்த சரீரம் விழுந்த பின்னர் எஞ்சிய வினைப்போக அனுபவத்தின் பொருட்டு மீட்டும் ஓர் உடலை யெடுத்தல் மாந்தர்க் கியல்பே. இறந்தார் பிறப்பார்; இது பிறத்தலுண்மை. இந்நான்கு உண்மைகளையுஞ் சந்திர மண்டிலம் கல்வியறிவில்லாதோருக்குஞ் சிறப்புற உணர்த்துகின்றது.

அறுபது ஆண்டு கூடியவட்டத்தி னிறுதியாயினமையால் அக்ஷய வருஷம் சிற்சில தீமைகளைத் தருவதென்பது ஒரு சாராரது கொள்கை. அரனடி பற்றிய திருவுடையாளருக்கு மறலியு மஞ்சுவாதை லின், அத்தகையினருக்கு யாவும் நல்லனவாமே யன்றித் தீயனவாகா. சந்திரன் இழைத்த பிழையைப் பொறுத்து அவனது கலைகளுள் ஒன்றைச் சடாபாரத்திற் சூடிச் "சந்திரசேகரன்" என்னுந் திருப்பெயரைத் தரித்தவன் நமது தலைவனன்றோ? "பிறந்து சொற்களைப் பேசத் தொடங்கிய காலந் தொட்டு அன்பினலுளமுருகி நினது சிவந்த திருவடியைச் சேர்ந்து நின்றேன்; தேவர்களைக் காப்பாற்றிய திருநீலகண்டப் பெருந்தகையே! ஏழையேனது துன்பத்தைத் தீர்ப்பது எப்பொழுது?" என்றிவ்வாறு இறைவனை நோக்கி முறையிடுதல் வேண்டும்.

வாழுநாள் சிலவேயாயின் அவற்றை நலனுறக் கழிப்பதே அறிவின் பாலதாகும். மனம் வாக்குக் காயங்களினல் இறைவனைச் சிந்தித்துத் துதித்து

வணங்குதல் வேண்டுமென உண்மைச் சுருதியுரைக்கின்றது. எல்லா நலனுக்கும் இருப்பிடம் இறைவனாதலின் அவனை நினைக்க எல்லா நலனும் வந்தெய்துகின்றன. நல்லெண்ணங்களினால் இதயம்நிறைந்திருப்பின் வாக்கிலிருந்து நல்ல மொழிகளே பிறக்கும்; உடல் நல்ல செய்கைகளையே செய்யும். ஆதலால் எண்ணங்களைத் தூய்மை செய்ய வேண்டும். தொற்றுநோய் பரவுதற்கு அணுபிரமாண கிருமிகள் காரணமாயிருக்கின்றனவென மேலைத்தேச வைத்திய நூலோர் கூறுவர். அதுபோலப் புறத்தே தோற்றி யருவருப்பை யளிக்கும் பாவம் என்னும் தொற்று நோய்க்குக் காரணம் புறந்தோற்ற நீர்மையவாகிய தீயவெண்ணங்களென்பது அறிஞர் கண்ட முடிபு. ஆதலால் தீயவெண்ணங்களை முளையிற்றானே களைந்து விடுதல் வேண்டும். அங்ஙனம் களைந்துவிடின் அவற்றின் வழியாக மனத்திலுதிக்கும் வெஃகல், வெகுளல், பொல்லாக் காட்சியென்னுங் குற்றங்களும், வாக்கிலே தோன்றும் பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்னுங் குற்றங்களும், உடம்பிற் றோன்றும் கொலை, களவு, காமமென்னுங் குற்றங்களும் தாமே யகல்வனவாம்.

பல நன்மைகளுக்கு உறைவிடமா யிருப்போரிடத்துச் சில குறைகள் காணப்படின் சந்திரனிடத்துங் களங்க முண்டென்பதை யுணர்ந்து அவரைத் தூற்றாது போற்ற வேண்டும்.

"திங்கள் மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார்
தெருமந்து தேய்வரோரு மாசுறின்"

என்பதை அறிஞராயினுர் உள்ளத்தில் வைத்துத் தம்மீது சிறிதேனும் மாசு படியாத வண்ணம் நடந்துகொள்வர். இவ்வாண்டு எம்மனைவருக்கும் நல்யாண்டாகுக. எம்முள்ளம் நல்லெண்ணங்க ளால் நிரம்புக, எம் வாக்கிலிருந்து புறப்படும் மொழிகள் நன்மொழிகளாகுக. யாம் நற்செயல் களையே புரியுமாறு இறைவ னெம்மோடு உட னிருந்து அருள் புரிக அன்பு வெள்ளம் யாண் டும் பரவுக. அனைத்துயிருக்கும் ஆறுதலுண்டாகுக.

---

## 7. தமிழ்ப் பல்கலைக் கழகம்

தமிழ்க் கலைப் புலமையை வளர்த்தற்கு வேண்டிய ஏற்பாடுகள் தமிழ்நாட்டில் ஆங்காங்கு நடைபெற்று வருகின்றன. தமிழ் நாட்டுக் கென வோர் பல்கலைக்கழகம் (University) நிறுவப்படல் வேண்டும் என்னும் எண்ணம் நெடுநாளாகத் தமிழ்ப் பெருமக்களுடைய உள்ளத்திற் கிடந்து வருகின்றது. அங்ஙனமாயினும், கருதிய அவ் வெண்ணத்தின் முற்றுப்பேறு கைகூடுகின்ற நாள் எந்நாளோ யாம் அறியோம். சென்னை இராஜ மந்திர சபையில் திரு. ஏ. இராமசாமி முதலியார் கொண்டுவந்த தீர்மானம் நிறைவேறிற்றிலது. ஆயி னும், அதன்பயனாகவும், தமிழ் மொழியின் நயத்துக் காக உழைத்துவரும் பட்டவர்த்தனர் திரு. சிவ ஞானம்பிள்ளையவர்கள் போன்ற தமிழ்ப் பெரு

மக்களுடைய விடாமுயற்சியினாலும் பல்கலைக் கழகத்தைப் பற்றித் தீர விசாரித்துத் தீர்மானஞ் செய்வதற்கென முப்பது பேரடங்கிய ஓர் ஆலோசனைச் சபையை இராஜாங்கத்தார் ஏற்படுத்தி யிருக்கின்றனர். இச்சபைக்குத் திருவுடை மன்னர் இராஜராஜேஸ்வர சேதுபதி தலைவராவர். ஆலோசனைச் சபையார் ஆராய்ந்து தீர்மானிக்கவேண்டிய முடிபுகளாவன:-

(1) தமிழ்நாட்டுக்கென ஒரு பல்கலைக்கழகம் நிறுவுதல் அவசியமா?

(2) அவசியமாயின் அக்கழகம் எவ்வெச் சிறப்பியல்புகளை யுடையதாயிருத்தல் வேண்டும்?

(3) அதனை நிறுவுவதற்குச் செய்யவேண்டிய முயற்சிகள் யாவை?

(4) அம்முயற்சிகளுக்கு வேண்டிய பணத்தைப் பெறுதற்குரிய வழி யாது?

(5) கழகம் நிறுவுதற்குரிய இடம் யாது?

என்பனவாம். இவற்றை நிரனிறையாக ஆராய்வாம்.

சங்கமிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப் புலவர் பல்கியிருந்த நந்தமிழ் நாட்டுக்குப் பல்கலைக்கழகம் புதியதொன்றல்ல. சேர சோழ பாண்டிய மன்னரும், குறுநில வேந்தரும், சங்கத்தாரும், பௌத்தமத ஜைனமதக் குரவர்களும், சைவ வைஷ்ணவ ஆசாரியர்களும், சடையப்ப வள்ளல்

போன்ற வேளாண் பிரபுக்களும், சேது மன்னர்களும் பரிபாலித்து வளர்த்து வந்த தமிழ் மொழி, கலை நூல் நிறைவினையுடையது. பழைய நூல்களை யாராய்ந்து கற்கவும், புது நூலாக்கவும் பொருந்திய அருங்கலைக் கழகமொன்று தமிழ்நாட்டில் ஏற்படுமாயின் அது பெரும் பயனளிக்கு மென்பதற் கையமில்லை. தர்மசாஸ்திரம் (Faculty of law), அர்த்த சாஸ்திரம் (Faculty of Natural and Politcal Science), கலா சாஸ்திரம் (Faculty of Arts), மோக்ஷ சாஸ்திரம் (Faculty of Divinity), என்னும் நாற்பெரும் பிரிவாக வைத்து, நூற்கலை யாராய்ந்த தமிழ் மொழிக்கு மேற்றிசைப் புலவர் கையாளும் பல்கலைக்கழக மரபு வேற்றுமையில்லா மரபேயாகும். மேற்றிசைக் கலைப்பயிற்சிமுறை பாரத கண்டத்தில் நிலைபெற்று எழுபது ஆண்டுகளாகின்றன, சென்னை. பம்பாய், காளிகட்டம் என்னும் மூன்றிடத்தினும் 1857-ம் ஆண்டில் பல்கலைக் கழகங்கள் நிறுவப்பட்டன. பின்னர் வேறு பல்லிடங்களில் அத்தகைய கழகங்கள் ஏற்பட்டன. கன்னட பாஷைக் காதாரமாக மைசூர்ப் பல்கலைக் கழகமும், தெலுங்கு மொழிக் காதாரமாக ஆந்திர பல்கலைக் கழகமும் ஏற்பட்டிருக்கின்றன. மலையாள பாஷைக்கு ஆதாரமாகிய பல்கலைக்கழகமும், திருவிதாங்கூர் நகரத்தில் விரைவில் ஏற்படும் போலும். அங்ஙனமாதலின் கலைவளம் நிறைந்த தமிழ் மொழிக்கு ஆதாரமாக ஒருபல்கலைக் கழகம் தனியாக ஏற்பட வேண்டும் என்பதை அறிஞர் யாவரும் மறுத்துரையார்.

தமிழ்ப் பல்கலைக் கழகம் எத்தகைய சிறப்பியல்புகளையுடையதா யிருத்தல் வேண்டுமென்பது

தீர விசாரிக்கவேண்டிய முடிபு. மேற்றிசைப் பல்கலைக் கழகங்கள் இருவகைய. ஒருவகை, தனித்த ஒரு கலாசாலையாய் நடப்பது. மற்றொன்று பற்பலவிடங்களிற் பலவாகிய கலாசாலைகளைக் கொண்டதாய் அக் கலாசாலைகளிலிருந்து வரும் பிரதிநிதிகள் கூடிய அதிகார சபையை யுடையதாய் நடப்பது. இரண்டாவது வகையே தமிழ் நாட்டுக்கு வேண்டியது. இனித் தமிழ்நாடு வர்த்தகப் பிரபுக்களையுடைய தாதலினாலும், பொருளாதார நிலையை விசாரித்துக் கற்பது யாவர்க்கும் பயனளிப்ப தொன்றாகலானும், பொருளீட்டற்குச் சார்பாகிய வர்த்தக நூல், உழவு நூல், கைத்தொழில் நூல் என்றின்னவற்றையும், அவற்றுக்காதாரமாகிய கணித நூல், பௌதிக நூல், தாவர நூல், ரசாயன நூல் என்றின்னவற்றையும், அறிவு விருத்திக்கு வேண்டிய இலக்கணம், தருக்கம், காவிய நாடக அலங்காரம், தேச சரித்திரம், என்றின்னவற்றையும், சட்டநூல், மருத்துவ நூல், சிற்பநூல் என்றின்னவற்றையும் தமிழ்ப் பல்கலைக்கழகம் தனக்கு அங்கமாய்க் கொண்டதாயிருத்தல் வேண்டும் கழகம் நிறுவுதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகள் யாவையென்பதனை யாராய்வாம். இப்பொழுது தமிழ்நாட்டிலிருக்கின்ற உயர்தரக் கல்விச்சாலைகளும், மதுரை, கரந்தை, யாழ்ப்பாணம் முதலிய இடங்களிலிருக்கின்ற தமிழ்ச்சங்கங்களும், பிற கல்விக் கழகங்களும் இவ்விஷயங்களைத் தீர விசாரித்துத் தத்தமதபிப்பிராயங்களை ஆலோசனைச்சபைக் காரியதரிசிகளாகிய திரு. பி. டி. ராஜன், திரு. அற்புதசுவாமி உடையார் ஆகிய இருவருக்கும் அனுப்புதல் வேண்டும். அதன்பின் ஒரு மகாநாடு

கூடித் தீர்மானங்களை முடிவு செய்து கொண்டு காரிய நிறைவேற்றச் சபை (Executive Committee) யொன்றினை யேற்படுத்தல் வேண்டும். இச்சபை கருமம் நிறைவேறும் வரையுங் கடமை புரிவதாய், தமிழ் நாட்டாருடைய உள்ளக் கருத்தை அரசினர்க்குத் தெரிவிப்பதற்குரிமை பூண்டதாயிருக்க வேண்டும்.

"முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னுல் முடியும்" என்றபடி பல்கலைக் கழகம் ஏற்படுத்துவதற்குப் பணம் வேண்டியது. இப்பணத்தில் ஒரு பாகத்தை அரசினர் கொடுத்துதவ வேண்டும். மற்றொரு பாகம் தமிழ்நாட்டுப் பிரபுக்களிடத்திருந்து வருதல் வேண்டும். கல்வியை நிறுவுவதற்கெனத் தமிழ்நாட்டு முன்னோர் கொடுத்த நிதிக்குவை திருவாவடுதுறை முதலாகிய திருமடங்களில் உளதாதலின், அந்த நிதிகளிலிருந்தும் பல்கலைக் கழகத்துக்கு ஒரு பாகம் வருதல் வேண்டும். தமிழ் நாட்டிற் பிறந்தோரனைவரும் தமது ஒரு நாளைய வருமானத்தைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்துக்குக் கொடுத்துதவுவார்களாயின் அவ்வழி கோடிக்கணக்கான ரூபா வந்து குவியும்.

இனி, பல்கலைக் கழகம் ஏற்படுத்துதற்குரிய இடத்தை யாராயுங்கால்; சங்கத்தாரிருந்து தமிழாராய்ந்த மதுரையை நினைக்கவேண்டியிருக்கிறது. மதுரையிலிருக்குஞ் செந்தமிழ்ச் சங்கமே ஒரு பல்கலைக் கழகமாக விருத்தியெய்துதற்குரியது. யாழ்ப்பாணத்திலிருக்கும் ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கமும் அத்தகையினதே. ஆயினும் தமிழ்ப்

பல்கலைக்கழகம் ஒன்றே யேற்படவிருக்கிறபடியால் அது தமிழ் நாட்டுக்கு நடுவாகவுள்ளதும், ஸ்ரீரங்க நாதனுடைய திருக்கோயிலையும், தாயுமானவர் திருமலையையும் பிறவற்றையும் அணித்தாகக் கொண்டதுமான திருச்சிராப்பள்ளியில் ஏற்படுதல் நன்று.

தமிழ்ப் பல்கலைக் கழகம் நமது சாதியாருடைய வாழ்க்கை முன்னேற்றத்துக்கு இன்றியமையாச் சாதனங்களுள் ஒன்று. ஆதலின் தமிழ்ப் பெருமக்கள் இவ்விஷயத்தின்மேல் ஊக்கம் செலுத்தி ஆவன செய்வார்களாக.

---

## 8. அறம் வளர்த்தல்

உலகமாதாவாகிய உமாதேவியார் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த முதல்வியாவார். ஆதரவற்ற ஆதுலருக்குத் தங்கியிருத்தற்கு வேண்டிய சாலைகளை யமைத்தலும், தடாகம், தண்ணீர்ப் பந்தர், சோலை, மடம் என்றின்னவற்றை யாக்கி வைத்தலும், கல்வி கற்போருக்கும் சமயநெறி நிற்போருக்கும் உணவளித்தலும், யாவருக்குந் தின்பண்ட நல்கலும், சிறைச்சாலையி லிருப்போருக்கும் விலங்கினங்களுக்கும் உணவளித்தலும், பசுவுக்கு வாயுறை கொடுத்தலும், பசுக்கள் தினவினை நீக்கிக் கொள்ளும் ஆவுரிஞ்சு தறி நட்டு வைத்தலும்,

ஏறு விடுத்தலும், வறியோராகிய மகளிருக்குச் சேலை, காதோலை யென்னுமிவற்றைக் கொடுத்தலும், இரப்போருக்கு ஐயமிடலும், கண்ணடி, சுண்ணம், கண் மருந்து, தலைக்கெண்ணெய் என்னுமிவற்றைக் கொடுத்தலும், பிரமச்சாரிக்குக் கன்னிகையைத் தானமாகக் கொடுத்தலும், (பொருட்பிணியால் மகளிர்பாற் பெறும் இன்பம் அடையப் பெருது வருந்துவோருக்கு அதனைக் கூட்டி வைத்தலும்) குழந்தைகளைப் பெறுதல், வளர்த்தல், பாலூட்டல் ஆகியவற்றுக்கு வேண்டுவன புரிதலும், அறவைப் பிணமடக்கல், அறவைத் தூரியமென்றின்னவற்றைச் செய்தலும், பிணியால் வருந்துவோருக்கு மருந்தளித்தலும், வறுமையாளரும் இன்றியமையாத வண்ணர், நாவிதரைப் பெறுமாறு செய்தலும், விலை கொடுத்து உயிர் நோய் தீர்த்தலும், பிறருடைய இல்லத்தைக் காத்தலு மென்னும் இவை முப்பத்திரண்டு அறங்களாம்.

இல்லற தருமங்களில் நிற்போர் யாவரும் தம்பால் இயன்றவரை அறஞ்செய் தல் வேண்டும். அவ்வறமே உயிர்க்குறுதி பயப்பது. இவ்வுலக வாழ்வின் முடிவிலே தருமமே தலைகாப்பது. மனைவி, மக்கள் சுடுகாட்டெல்லை வரை வருவார்; அதற்கப்பால் நம்மோடு உடன் செல்வன நாம் செய்து கொண்ட பாவ புண்ணியங்களேயாம். இவ்வுண்மையை யறிந்து வாழ்நாள் நிலைத்திருக்கும் போதே தருமத்தைச் செய்யவேண்டும். மேலும், இவ்வுலகிற் சிறிது காலமாவது நிலைத்திருக்கும் நீர்மையது புகழினல் எய்திய உடம்பு. உண்மைப் புகழுக்கு நிலைக்களம் அறமாதலின், அவ்வறத்தினை இடை

விடாது செய்யவேண்டும். எல்லாத் தானத்திலும் ஞானதானஞ் சிறந்ததென்பர். அது இம்மை மறுமைப்பயன் இரண்டினையுங் கொடுப்பதாகலின் வித்தியார்த்திகள் மனஞ் சோராது கல்வி முயற்சியிற் கருத்தாயிருக்கும் வண்ணம் அவருக்கு வேண்டிய அன்ன வஸ்திரம், புத்தகம் என்றிவற்றைக் கொடுத்துதவுதல் பெரியதொரு புண்ணியமாகும்.

கல்விச் சாலைகள் பல நமது நாட்டிலிருக்கின்றன. இவற்றுட் பெரும்பாலன புற மதத்தாரால் நடத்தப்படுவன புற மதத்தாருடைய முதல் நோக்கம் தமது மதத்தைப் பரப்புவது. அதற்குக் கல்விச் சாலைகள் கருவியாகவும், நிலைக்களமாகவும் இருக்கின்றன. ஆதலால் நமது சிறுவரை நமது சற்சமய நெறியிலே பயிற்றுவதற்கு நமக்கென்று கல்விச் சாலைகள் வேண்டுமென்பதை முதல் எடுத்துக் கூறியவரும்; அதற்காக வேண்டுவனவற்றைச் செய்தவரும் காவலரும் பாவலரும் புகழும் பெருந் தகைமைவாய்ந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரேயாவார். அவர் காட்டிய நன்முன்மாதிரியைக் கடைப்பிடித்தே நமது நாட்டில் சைவத் தமிழ் வித்தியாலயங்களும் ஆங்கில வித்தியாலயங்களும் எழுந்தன. இதுவரையில் நிறைவுபெற்றிருக்கின்ற முயற்சி இன்னுஞ் செய்யவிருக்கின்ற வேலையோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகச் சிறிய அளவினதேயாம். ஆகையால் சைவ நன்மக்கள் இத்துறையில் இன்னும் பல ஆண்டுகளுக்கு இடைவிடாது முயற்சிக்கவேண்டும்.

யாழ்ப்பாணத்திலே தமிழ், சமஸ்கிருதம் கற்கும் மாணவர் தொகை இற்றைக்குச் சில ஆண்டுகளுக்கு முன்பிருந்ததினும் பார்க்கப் பெருகிக்கொண்டு வரு

கிறது. இம் மாணவரது ஆராய்ச்சி முயற்சிக்குச் சாதனமாக ஒரு நூற் களஞ்சியம் இன்றியமையாது வேண்டப்படுவது. தமிழ் சமஸ்கிருதம் படிப்போர் உத்தியோக முயற்சிகளுக்கு வேண்டப்படாத வழியிலே உழைப்பவராதலினாலே அவருக்கு வேண்டிய சௌகரியங்களைப் பொதுநன்மை கருதிய பெருமக்களே செய்து வைக்க வேண்டும். இந்தியாவிலே இருக்கின்ற திருமடங்களிலே யுள்ள வசதிபோன்ற வசதி யாழ்ப்பாணத்திலில்லை அதனாலே உயர்தரத் தமிழ்ப் பாண்டித்திய மடைவது நம்மாணவருக்கு அரியதொரு கருமமாக விருக்கின்றது. தரும சிந்தையுள்ள தமிழ் மக்கள் இதனை மனத்தில் வைத்து ஆகவேண்டுவனவற்றைச் செய்யவேண்டும்.

சமயக் கல்விக்குத் தமிழ்க் கல்வி யின்றியமையாதது. ஆதலினாலே தமிழை வளர்ப்பவர் சைவத்தை வளர்ப்பவராவர். இம் முயற்சி ஒருவராலேயாவதன்று. ஆயினும் ஒவ்வொருவரும் தம்மாலே இயன்ற அளவு இப்பெரு முயற்சியைச் செய்ய வேண்டும், கருமமே கண்ணாயினார் பிறருடைய அவமதிப்பையும் இழிப்புரையையும் பொருட்படுத்தலாகாது. உலகு புகழ்ந்தேத்தும் நாவலரவர்களுக்கே அவர்கள் காலத்திருந்த சைவ சமயிகள் செய்த இடையூற்றுக்கு அளவுண்டோ? நாவலரவர்கள் அக்காலத்தில் மனம் நொந்து கூறிய மொழிகளை ஈண்டுத் தருவோமாக.

"சைவ சமயத்தையும் அதன் வளர்ச்சிக்குக் கருவியாகிய கல்வியையும் வளர்த்தல் வேண்டுமென்னும் பேராசையினாலே இருபது வருஷகாலம்

நான் செய்த முயற்சிகள் பல; அவைகளுள்ளே சித்தி பெற்றவை மிகச்சில. சைவசமயிகள் யாவரும் சைவ சமயத்திலே சிரத்தை யுடையர்களாகித் தங்கள் தங்களால் இயன்ற உதவி செய்வார்களாயின்; நான் எடுத்த முயற்சிகளெல்லாம் இதற்கு முன்னரே நிறைவேறிவிடும். நிறைவேறின் என்னைப் போலவே பிறரும் அங்கங்கே நன் முயற்சிகளைச் செய்வார்கள்; செய்யிற் கல்வியுஞ் சமயமும் தழைத்தோங்கும். தன்னிம்மைப் பயன்களெல்லாம் இழந்தும் கைம்மாறு வேண்டாதும் இருபது வருஷ காலம் சுவசமயவிருத்தியின் பொருட்டு முயற்சி செய்பவன் ஒருவன் மற்றைச் சமயத்தார்களுள் இருப்பானாயின், அவன் எடுத்த முயற்சிகளுள் யாது சித்திபெறாது. நம்முடைய சைவசமயிகள், தங்கள் சமயமும் பாஷையும் விருத்தியடையும் பொருட்டு நான் செய்யும் முயற்சிகளுக்கு உதவி செய்யாமை மாத்திரையின் அமையாது, பெரும்பான்மையும் அவமதிப்பும் இடையூறுமே செய்கின்றார்கள். இதனால் எனக்கு யாதாயினும் ஒரு குறைவு உண்டு என்னுங் கவலை எனக்குச் சிறிதுமில்லை, எனக்குச் செய்யப் படுவனவற்றைக் காணுந்தோறுங் கேட்குந்தோறும், பிறருக்குத் தமிழ் கற்றலின் கண்ணும் தமிழ்க் கல்வியையும் சைவசமயத்தையும் வளர்த்தலின் கண்ணும் ஊக்கங் கிளராவண்ணம் தடை விளைகின்றதே என்னுங் கவலை எனக்குப் பெரிது முண்டு. பூர்வ காலத்திலே சைவசமய விருத்திப் பொருட்டு முயன்ற பெரியோர்களுக்குச் சுவ சமயிகளாலே நன்கு மதிப்பும் பரசமயிகளாலே இடையூறுஞ் செய்யப்பட்டன. தற்காலத்திலே சைவசமய விருத்திப்

பொருட்டு முயலுஞ் சிறியேனுக்குச் சுவசமயிகளாலேயே அவமதிப்பும் இடையூறுஞ் செய்யப்படுகின்றன. பரசமயிகளோ எனக்கு இடையூறு செய்யவுமில்லை; என்னை அவமதிக்கவுமில்லை; இஃதென்னையாச்சரியம்!

இவ்வாச்சரியம் இன்றுமுள்ளது. ஆதலால் சுவ சமய, சுய பாஷாபிவிருத்திக்காக உழைப்போர் மனச்சோர்வடையாது முயற்சிப்பார்களாக.

---

## 9. கதிர்காம தேவாலயத் திருப்பணி

கதிர்காமம் ஞானபூமி. ஞான சத்திதரராகிய சண்முகப் பெருமான் இத்திருப்பதியிற் குருவடிவாக எழுந்தருளியிருந்து தம்மையடைந்தோருக்கு அநுக்கிரகம் புரிந்தருளுகின்றார். கதிர்காமத்தைத் தரிசிக்குஞ் சிவனடியார் சிவ சின்னமாகிய காவி, உருத்திரமணி, திருவெண்ணீறு என்னும் இவற்றையணிந்து திருவீதியிலே யுலவுகின்ற காட்சி இருடிகணங்கள் தவம் புரிந்துறைகின்ற தபோவனங்களை நினைப்பூட்டுந் தகைமை சான்றது. மாசற்ற தெளிந்த நீரோடுகின்ற மாணிக்க கங்கையும், அப்பன்றிரு விளையாடல் புரியுஞ் செப்பருஞ் சிறப்பு வாய்ந்த மலைக் குன்றுகளும் இயற்கையினெழினலத்தையும் தெய்வத் தன்மையையும் இனிதினுணர்த்துகின்

றன. சோலை சூழ்ந்த இச்செழும்பதியிலே அகத்திய மாமுனிவர் அருந்தவம் புரிந்து வதிந்து வந்தனரெனப் புராணங் கூறுகின்றது.

புராதனமானதும் மாட்சிமை பொருந்தியதுமாகிய இத்திருப்பதிக்கு யாத்திரை செய்யும் அன்பர் தொகை வருடந்தோறும் பல்கிக்கொண்டு வருகின்றது. இவ்வாண்டிலே கதிர்காமத்தைத் தரிசித்த யாத்திரிகர் தொகை முன்பொருபோதுமில்லாத பேரளவினதெனஅன்பர் பலர் கூறக்கேட்டோம். யாத்திரிகர் வழியில் இளைப்பாறிச் செல்வதற்காகப் பற்பல விடங்களிலும் தண்ணீர்ப் பந்தர்களும் சத்திரஞ் சாவடிகளும் அமைக்கப்பட்டிருந்தனவென அறிகின்ரேம். இவற்றை யமைத்த குகநேயச் செல்வர்கள் முருகப் பெருமானுடைய திருவருளுக் காளாவார் என்பது திண்ணம். வழியில் ஏற்படுஞ் சௌகரியங்களைப் போலவே கதிர்காமத் திருப்பதியினும் யாத்திரிகருக்கு வேண்டிய சௌகரியங்கள் ஏற்படுத்தல் வேண்டும். பலர் குழுமியிருக்குமிடத்தில் நோய் முதலியன ஏற்படாவண்ணம் வசிக்குமிடங்களைச் சுத்தமாய் வைத்திருப்பதற்கு வேண்டிய ஒழுங்குகளைச் செய்துவைத்தல் வேண்டும். இலங்கைத்தீவிலுள்ள சமயாபிவிருத்திச் சபைகளுள்ளே முதலில் வைத்தெண்ணப்படுவதாகிய கொழும்பு விவேகானந்தசபை இந் நன்முயற்சியிற் கையிடுமாயின், ஆகவேண்டியன நிறைவுறுமென்பதற்கையமில்லை.

ஆண்டு தோறும் ஆடித் திங்களிலே வருகின்ற கதிர்காமப் பெருவிழா, இலங்கையிலுள்ள சைவமக்களுக்கு ஒருவரையொருவர் கண்டு

அளவளாவுவதற்கு வாய்ப்புடைத்தாகிய ஒரு தருணமாக அமைந்திருக்கின்றது. யாழ்ப்பாணத்திலும், திருக்கோணமலையிலும், மட்டக்களப்பிலும், கொழும்பிலுமிருக்குந் தமிழர் சுப்பிரமணியப் பெருமானைத் தரிசிக்கப் போகும் இத்தருணத்திலே ஒருவரையொருவர் தரிசிக்க நேர்வதும் பெரும் பாக்கியமன்றோ? ஈசன் எமக்கு இனியனாயிருப்பது போலவே சிவனடியாரும் எமக்கு இனியராயிருக்கின்றார். சங்கமம் எனப் போற்றப்படும் சிவனடியார் திருக்கூட்டம் எமது ஈசனுடைய திருமேனிகளுள் ஒன்று என அறிஞராற் கூறப்படுவது. இத்திருமேனிக்குத் தொண்டுபுரிவது பெரியதொரு சிவபுண்ணியமா மென்பது சைவ நூன் முடிபு. அஃதொருபாலாக, உடன்பிறந்தாரும், ஒரூராரும், ஒரு கோத்திரத்தாரும், ஒரு மொழியாளரும் தம்மைத் தாம் காணுங்கால் தம்முள்ளே யமைந்து கிடந்த பொதுத்தன்மை காரணமாக அன்பினால் அளவளாவுவது போலச் சைவராயினார் தம்மைத் தாங்காணுங்கால் ஆர்வமிக்கு அளவளாவுதல் மரபேயாகும். இறைவனுடைய மக்களாகிய நாமெல்லாம் அன்பினால் ஒன்றுகூடி அகமகிழ்ந்திருத்தலே நாம் செய்யவேண்டிய தொண்டுகளுள்ளே சிறந்ததொரு தொண்டாகும்.

யாழ்ப்பாணத்துத் தெருவீதியிலே சித்தந் தெளிந்த வயோதிகத் துறவி யொருவரை யாம் அடிக்கடி காண்பதுண்டு. அவருடைய உடைநடை முதலிய வெளிவேடங்களைக் கண்ணுறுவோர் அவரைப் பைத்தியக்காரனென்று தீர்ப்பிடுவர். ஆனால் உண்மையில் அவர் ஒரு பரமஞானி. கையிலேதா

வது பழம், பக்ஷணம் இருந்தால் அதனை உண்ணும் படி தருவார்; தரும்போது "தானுண்பது மண்ணுண்பது, பிறருண்பது சிவமுண்பது" என்னும் வாக்கியத்தைச் சொல்லித் தருவார். இவ்வாக்கியத்தினுள்ளே சிறந்த பொருளமைந்து கிடக்கின்றது. சிவனடியாருக்குத் தொண்டுபுரிதலே சிவபெருமானுக்கு உவந்த தொண்டாகும். அதன்றியும் சைவராகிய நாமெல்லாம் சகோதர நேயம் நிறைந்து ஒன்றித்திருப்போமாயின் நம்மையசைப்பது யாவரானும் முடியாத காரியமாகும்.

சைவராகிய நாம் நம்முள்ளே சகோதர நேயத்தை எவ்வாறு வளர்த்தல் கூடும் என்பது எம்மாற் சிந்திக்கற்பாலது. உடன் பிறந்தாரும் நீண்டகாலம் பிரிந்து வாழ்வராயின் ஒருவரை ஒருவர் மறந்து விடுவர். யாம் சகோதரரென்னும் எண்ணத்தை யகத்திலும் புறத்திலும் காட்டிச் சாதனை செய்து வருவோமாயின் அன்பு வளரும். அஃதன்றியும் ஒருவருக்கொருவர் உற்றுழி யுதவிச் சேவையாற்றுவோமாயின் வளர்ந்த அன்பு உறுதியாகப் பலப்படும். ஆதலினாலே கதிர்காமம் போன்ற திவ்விய க்ஷேத்திரங்களிலே யாத்திரை செய்யுங் காலத்தில் சைவராகிய நாம் அந்நியோந்நிய சேவையினாலும் அன்பினாலும் எம்முள்ளே இயல்பாக ஏற்பட்டிருக்கிற சகோதர நேயத்தை உறுதிப் படுத்த வேண்டும்.

புண்ணிய க்ஷேத்திரங்களிலே யாம் வசிக்கின்ற காலங்களில் இம்மண்ணுலகிலல்ல ஒரு வானுலகிலே தேவ கணங்களோடு உடனுறைவதாக மனத்

திலே சிந்தித்து யாம் மகிழ்ச்சியடைய வேண்டும். உண்மையும் அதுவே. எம்பெருமானும் தவத்தின் மிக்க பெரியோர்களும் தமது திருவடி தீண்ட நடந்துலாவிய பூமி கேவலம் மண்ணுலகமாகாது. சிவனடியார் நடமாடுகின்ற புண்ணிய தலங்களை அசுசிப்படுத்தலாகாது. அறியாமையினாலும் சோம்பலினாலும் சிலர் அசுசிப் படுத்தினும் அவ்வசுத்தங்களையகற்றித் தூய்மைப்படுத்தல் அறிஞர் கடன். சிவ க்ஷேத்திரங்களில் வசிக்கின்ற காலத்தில் சிற்றளவு பொழுதையேனும் அவப்பொழுதாக்குதல் கூடாது. சுவாமி தரிசனம் முடிந்து எஞ்சிய நேரத்தைச் சத்கால க்ஷேபத்திலும் சமயாபிவிருத்தி தமிழபிவிருத்திக்குரிய சிந்தனைகளிலுங் கழிக்கலாம். சங்கப் புலவரும் தமிழ்த் தெய்வமுமாகிய சுப்பிரமணியப் பெருமான் கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் புண்ணிய க்ஷேத்திரத்திற் சமயாபி விருத்திக்கும் தமிழபிவிருத்திக்கும் ஆகவேண்டிய நன் முயற்சிகளைப் பற்றி யாராய்ச்சி செய்வது மரபேயாகும். இத்தகைய முயற்சிகளையும் கொழும்பு விவேகானந்த சபை போன்ற சபைகள் முன்னின்று செய்விக்கலாம்.

சபையின் அங்கத்தவராகிய சிவனடியார் சிலர் சபையின் பிரதிநிதிகளாகக் கதிர்காம யாத்திரை செய்ய வேண்டும். விழா ஆரம்பிக்குந் தினத்துக்குச் சிலநாள் முன்பாகவே கதிர்காமத்தையடைந்து, இன்னின்ன செய்ய வேண்டுமென்பதை நிச்சயித்து, ஆங்ஙனம் செய்யவேண்டிய முயற்சிகளைத் தம்முள்ளே பாகுபாடு செய்து கொள்ளுதல் வேண்டும். பின்பு யாத்திரிகர்களுக்குள்ளே இளைஞ

ரும் தன்னல மறுப்புடையோருமாகிய சிலரைத் தாஞ்செய்யும் முயற்சிகளுக்குத் துணையாகச் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும். பொருளுஞ் சிறிது வேண்டப்படுமாதலின் அதனை யொருவருக்குங் கஷ்டமில்லாத வண்ணம் சிறிது சிறிதாகப் பலரிடமும் பெற்றுக் கணக்கு வைத்துச் செலவு செய்ய வேண்டும். புராண படன சத்காலக்ஷேப நிருவாக சபை, ஆதுலருக்கு அன்னமளிக்குஞ் சபை, நோயுற்றோருக்குத் தொண்டுபுரியுஞ் சபை, திருவீதியலகிடுஞ் சபை என்று இன்னன பல நிருவாக சபைகளை யேற்படுத்தி ஒரு மத்திய விசாரணைச் சபையையும் அமைத்துத் தொண்டுபுரியின் அத்தொண்டு பெரும் பயனைத் தரும்.

ஈண்டு நாம் கதிர்காம தேவாலயத் திருப்பணியின் சார்பாகச் சொல்லிய குறிப்புகள் ஏனைய ஸ்தலங்களிற் றிருவிழாக் காலங்களிலே யாம் செய்ய வேண்டிய முயற்சிகளுக்கும் ஏற்புடையன. அவமாக வாணவேடிக்கையிலும் ஆடம்பரங்களிலும் செலவிடுகிற பணத்தையெல்லாம் சிவனடியாருக்குத் தொண்டுபுரிதலிற் செலவிடின் அஃதெவ்வளவு உசிதமாகும்.

---

# 10. இந்து மதம்

உலக முய்யத் திருவவதாரஞ் செய்தருளிய ஞான சற்குரு மூர்த்தியாகிய ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளது திருப்பெயரைத் தாங்கிய இப் பத்திரிகையின் ஒன்பது பகுதிகள் வெளிவந்து விட்டன. இது முதற்றொகுதியின் பத்தாவது பகுதி. இதன் பதிப்பாசிரியராயிருந்து வேண்டுவன புரிதற்குடன்பட்ட யாம் இம்முயற்சியோடு இளைஞரது கல்வி வளர்ச்சிக்கு ஆகவேண்டிய முயற்சிகள் பலப்பல செய்ய நேர்ந்தமையானும், அம்முயற்சிகளுக்காக யாழ்ப்பாணம், கொழும்பு, திருக்கோணமலை, மட்டக்களப்பு ஆகிய இடங்களுக்குப் பலமுறையும் பிரயாணஞ் செய்ய நேர்ந்தமையானும், பிறவாற்றானும், இம்முயற்சியை முழுமனத்தோடு செய்ய இதுவரையும் தருணம் வாய்த்திலது. இப்பொழுது சிறிது ஓய்வு ஏற்பட்டிருக்கின்றமையால் இதுகாறும் யாம் வெளியிடாதிருந்த ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி ஒரு சில குறிப்புகள் கூற முன்வந்தனம். விவேகானந்த சுவாமிகள் எதற்காக அவதரித்தார்? அவர் சிறப்பாகக் கைக்கொண்ட கொள்கை எது? அவருடைய திருப்பெயரைத் தாங்கிய சங்கங்களும் சபைகளும் செய்து நிறைவேற்றுதற்குரிய முயற்சிகள் யாவை? இவையும் இவைபோன்ற பிறவினாக்களும் அறிஞர் பலரது உள்ளத்து எழுவதியல்பேயாம். இவற்றை அறியும் ஆவலுடையவராய் எழுத்து மூலமாகவும் நேரிலும் எம்மை வினவிய அன்பர் பலருளர். இற்றை நாள் வரையும் இவ்வினாக்களுக்கு விடையெழுதாது காலந்தாழ்த்த

குற்றத்தைப் பாராட்டாதிருக்குமாறு அத்தகைய அன்புடையாரைப் பரிந்து வேண்டி யாமெடுத்துக் கொண்ட விஷயத்தினுட் புகுவோமாக.

விவேகானந்த சுவாமிகளுடைய சீவிய சரித்திரமானது கேட்பாருக்கு உற்சாகத்தைத் தருவது. பரதகண்ட வாசிகளாகிய நம்மனோருக்கு புத்துயிரையும் புதிய உணர்ச்சியையும் அளிக்கும் ஆற்றல் சான்றது. நமது தாய்நாட்டினுடைய பழமையும் மாட்சியும் இன்றும் அழியாதிருக்கின்றன என்னும் உண்மையை உலகத்தாருக்கு உறுதிப்படுத்திக் காட்டுவது. இத்தகைய ஜீவிய சரித்திரத்தை யாம் ஒரு சிறிதாவது அறிந்து கொள்ள வேண்டுமாயின் இந்துக்களாகிய யாம் கைக்கொண்டொழுகும் சமயத்தைப் பற்றித் தெளிவாகவும் வரையறையாகவும் அறிந்து கொள்ளுவது முதற்கண் இன்றியமையாத தொன்றாகும்.

இமயம் முதற் குமரியீறாகக் கிடந்த பெருநிலப் பரப்பிலே வசிக்கும் அறிவுடைய மக்களால் தொன்று தொட்டு அநுட்டிக்கப் பட்டுவருஞ் சமயத்தை அயல்நாட்டார் இந்துமதமென் வழங்குவர். சைவம், வைஷ்ணவம் என்னும் இருபெரும் பிரிவினையுடையதாய் வேதாகமப் பிரமாணம் மேவி நிலைபெற்றிருக்கும் நமது சமயத்தைப் பொதுவழக்கு நோக்கி யாமும் இந்துமதமென வழங்குதல் இழுக்காகாது. இம்மதம் தன்னைக் கைக்கொண்டொழுகும் மானிடரைத் தேவராக்குவது. இதுவே இம்

மதத்தின் சிறப்பியல்பு. கவிவாணரும் உத்தம தேசாபிமானியுமாகிய சுப்பிரமணிய பாரதியார் இவ்வுண்மையை வற்புறுத்தி,

1. "மண்ணுலகின் மீதினிலே எக்காலும்
அமரரைப்போல் மடிவில்லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலாம இதற்குரிய
உபாயமிங்கு செப்பக் கேளீர்
நண்ணியெலாப் பொருளினிலும் உட்பொருளாய்ச்
செய்கையெலாம் நடத்தும் விருய்ந்
திண்ணியநல் லறிவொளியாய்த் திகழுமொரு
பரம்பொருளை அகத்திற் சேர்த்து

2. செய்கையெலாம் அதன்செய்கை நினைவெல்லாம்
அதனினைவு தெய்வ மேநாம்
உய்கையுற நாமாகி நமக்குள்ளே
யொளிர்வ தென உறுதி கொண்டு
பொய்கயமை சினம்சோம்பர் கவலைமயல்
விண்விருப்பம் புழுக்கம் அச்சம்
ஐயமெனும் பேயையெலாம் ஞானமெனும்
வாளாலே அறுத்துத் தள்ளி

3. எப்போது மானந்தச் சுடர்நிலையில்
வாழ்ந்துயிர்கட் கினிது செய்வோர்
தப்பாதே இவ்வுலகில் அமரர்நிலை
பெற்றிடுவார் சதுர்வே தங்கள்
மெய்ப்பான சாத்திரங்கள் எனுமிவற்றா
லிவ்வுண்மை விளங்கக் கூறும்
துப்பான மதத்தினையே ஹிந்துமத
மெனப்புவியோர் சொல்லு வாரே"

என இந்து மதத்துக்கோர் வரைவிலக்கணங் கூறுகின்றார். "இப்பூவுலகத்திலே தேவரைப்போல மூப்பு, நோய், மரணமின்றி வாழ்ந்திருக்கலாம். இது நிச்சயமான உண்மை இதற்குரிய உபாயத்தைச் சொல்வோம் கேட்பீராக. எப்பொருளினும் உட்பொருளாய் எல்லாத் தொழில்களையுஞ் செய்து முடிக்கின்ற அளப்பரும் வலிமையாய் அறிவொளி வடிவமாகத் திகழுகின்ற பரம்பொருள் ஒன்றுளது. அப்பரம் பொருளை உள்ளத்திலிருத்தி அதன்வசப்பட்டு நிற்றலாலே நம்வசமிழந்து செய்கையெல்லாம் அதன் செய்கை; நினைப்பெல்லாம் அதன் நினைவு; நம்முள்ளே உண்மைப் பொருளாக விளங்குகின்ற தெய்வமே நாம் என்று மெய்ஞ்ஞானத்தால் உணர்தல் வேண்டும். அங்ஙனமுணர்ந்து ஞானமாகிய வாளைக் கரத்திலேந்தி நம்மை ஏழை மக்களாக்கும் பொய், கயமை, சினம், சோம்பல், கவலை, மயல், வீண் விருப்பம், புழுக்கம், ஐயம் என்னும் பேய்களையெல்லாம் வெட்டி வீழ்த்தி, என்ஞான்றும் ஆனந்தத்தோடு வாழ்ந்து எல்லாவுயிர்கட்கும் இனிது செய்தல் வேண்டும். இத்தகைய தெய்வத் தன்மை பொருந்திய வாழ்க்கையை அடைதற்குரிய உபாயங்களை நான்கு வேதங்களாலும் சாத்திரங்களாலும் எடுத்தியம்புகின்ற ஆற்றல் சான்ற சமயத்தையே ஹிந்து மதமென உலகத்தார் கூறுவர்.

"ஆண்மையும் ஆற்றலும் நிறைந்தவனே சமயவுண்மைகளை யுள்ளவாறறியவல்லவன்" என்பது விவேகானந்த சுவாமிகளின் அருள்வாக்கு. வீர தீரமே மெய்ந்நெறிக்கு அறிகுறி. வீரமில்லாதவனிடத்து ஞானமுதிப்பதில்லை. ஒருசிறிதுதிப்பினும்

பேடிகை வாள்போற் பயன்றராதொழியும். சர்வ வல்லமையுடைய ஆண்டவனுடைய பிள்ளை நாம் என்று அறியும் அறிவே ஆண்மைக்கும் அச்சமின்மைக்கும் அடியாதாரமாகும். ஞானியானவன் ஈசுவரனோடு ஒன்றாய் நிற்குந் தன்மையைச் சதா தியானிக்கிறான்; ஆதலால் அவன் ஆநந்தத்தால் நிறைந்திருக்கிறான். நிர்ப்பயத்தோடு கூடிய ஆண்மை யவனிடங் காணப்படுகிறது. விவேகானந்த சுவாமி ஆண்மை மிக்க சிங்கவேற்றை நிகர்த்திருந்தார். போதனையினாலுஞ் சாதனையினாலும் பரத கண்டத்து மக்களை ஆண்மை மிக்க ஆண் மக்களாக்குவதே விவேகானந்தரின் முக்கிய நோக்கமாக விருந்தது.

தமது தாய் நாட்டைச் சுற்றிப் பார்த்தார். எவ்விடத்தும் துன்பமும், வறுமையும், அஞ்ஞானமும் ஏழ்மையும் நிறைந்திருக்கக் கண்டார். வீரதீரராகிய அவருடைய நெஞ்சம் மிகுந்த கவற்சியடைந்தது. மகரிஷிகளின் புத்திரரும் அஞ்சா நெஞ்சுபடைத்த அரசர்களின் வழித்தோன்றியவருமாகிய பாரதமக்கள் இத்தகைய கீழ்நிலையை யடையக் காரணமென்னவென்று தம்முள்ளே சிந்தித்தார். பிரமச்சரியத்தினின்று உற்பத்தியாகிற சிரத்தையும் ஊக்கமும் நிரம்பிய ஆண்மக்கள் குடியிருக்கிற நாடு ஒருபொழுதுங் கீழ்நிலையடையாது. ஆதலால், ஆண் மக்கள் உண்மையாகிய ஆண்மக்களாவார்களாயின் நாடு க்ஷேமமடையும்; என்பதை விவேகானந்தர் உணர்ந்தார். இம்மேலாகிய உண்மையைச் சாதனையினாலும் போதனையினாலும் நிலைநிறுத்தி நம்மனைவரையும் உய்யக் கொள்வதே இப்பெரியாருடைய வாழ்க்கையின் நோக்கமாயிருந்தது.

# 11. ஆண்மையும் பெண்மையும்

"வாயுள்ள ஆணைப் பெறு; அழகுள்ள பெண்ணைப்பெறு" என்பது பழமொழி. ஆண்மை நிரம்பிய ஆண் மக்களும் பெண்மை நிரம்பிய பெண்மக்களும் உறைகின்ற நாடு தேவருலகத்தினும் மிக்க சிறப்புடையது. ஆண்மை என்பது ஆளுந்தன்மை; பெண்மை என்பது விரும் பப்படுந் தன்மை. யாம் எடுத்துக் காட்டிய பழமொழியினுள்ளே 'வாய்' என்னுஞ் சொல் ஆண்மையைக் குறிப்பது. 'அழகு' என்னுஞ் சொல் பெண்மையைக் குறிப்பது. வாய்மையுடைய ஆண்மகனே ஆளுந்தன்மையுடையவனாகின்றான்; அழகுடைய பெண்மகளே விரும்பப்படும். நலமனைத்தினையும் உடையவளாகின்றாள். ஈண்டு அழகு என்றது கண்டுங் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறியப்படுகின்ற மேனியழகோடு அமையாது "நெஞ்சத்து நல்லம் யாம்." என்றறிகின்ற கல்வியழகினையும் குறிப்பது. வாய்மையாகிய ஆண்மையினையும் அழகாகிய பெண்மையினையும் யாங்ஙனம் பெறுதல் கூடுமென்பதனையும், அவற்றைப் பெற்றவழி யாங்ஙனம் விருத்தி செய்தல் கூடுமென்பதனையும் ஈண்டு ஆராய்தல் மேற்கொள்வாம்.

ஆண்மைக்கும் பெண்மைக்கும் ஆதாரமாயிருக்கின்ற சாந்தம், தயை பொறுமையாகிய நற்குணங்கள் அனைத்தும் சமய நெறிநின்று ஒழுகுவோரால் எய்தற்குரியன. நீரின்றி மரம்வளராத தன்மை போலவும் உணவின்றி உடல் வளராத தன்மை

போலவும், சமய நெறியாகிய உறுதிப் பொருளின்றிச் சனசங்கம் வளர்ச்சியடையமாட்டாது. இவ்வுண்மையை யறிந்த ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் நமது தாய் நாடு உயர்வடையும் பொருட்டும் இந்திய மக்களாகிய யாம் அனைவரும் துன்பம், பிணி, வறுமை யென்றின்னவற்றினின்று நீங்கி சுகமடையும் பொருட்டும் அறநெறியாகிய வைதீக தர்மத்தை உபதேசித்தருளினர். அறம் வளர அனைத்தும் வளரும், இது உலக சரித்திரத்தினல் உணர்த்தப்படுகின்ற உண்மை. கௌதம புத்தர் தர்மோபதேசஞ் செய்தார். அதன் பயனக அவர் காலத்திலே இந்தியா பலவகைச் சிறப்புகளை யடைந்தது. நாளந்தை, தக்ஷசீலம், காஞ்சிபுரம் ஆதிய இடங்களிற் சர்வகலாசாலைகள் எழுந்தன. எவ்விடத்துங் கற்று வல்லோர் பலர் நிறைந்திருந்திருந்தனர். சிற்பநூல் சித்திர நூல் என்றிவை விருத்தியடைய, நாடெங்கும் சித்திரங்களமைந்த சிறந்த கட்டிடங்களெழுந்தன. இப்பரிசே இஸ்லாமத ஸ்தாபகராகிய முகம்மதுநபி அராபி நாட்டிலே தர்மோபதேசஞ் செய்ததின் பயனக, மேற்கே ஸ்பானியர் முதல் கிழக்கே இந்தியா வீருகவுள்ள தேசங்களனைத்தும் இஸ்லாமிய மதத்தவரது ஆட்சிக்குட்பட்டன. எங்கணும் சர்வகலாசாலைகளும் சிறந்த கட்டிடங்களும் எழுந்தன. நாகரீகமற்றிருந்த அராபிய மக்கள் நாகரீகத்தின் உச்சியை யடைந்தார்கள். இவையெல்லாம் உலக சரித்திரத்தினல் உணரப்படுகின்ற உண்மைகளாகும்.

ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளது உபதேசத்தின் பயனக நமது தாய் நாட்டிலே புத்துயிரும்

புதிய உணர்ச்சியும் தோன்றியிருக்கின்றன. சுவாமிகளது குருமூர்த்தியும் அவதார புருஷருமாகிய ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ச தேவரது அன்பு கரைகடந்த வெள்ளப் பெருக்காகி இந்தியாவுக்கு வெளியேயிருக்கின்ற தேசங்களினும் பரவி நிற்கின்றது. ஆன்ம சக்தியின் சலனத்தினாலே மனோ சக்தியும் பூத சக்தியும் அசைந்து தொழில் செய்வவாதலால், ஆன்ம சக்தியே ஒரு தேசத்தாரது முன்னேற்றத்துக்கு இன்றியமையாது வேண்டப்படுவது. இவ்வான்ம சக்தி அவதார புருஷர்களிடத்திருந்தும் தவத்தின் மிக்க பெரியோர்களிடத்திருந்தும் தோன்றுவது. இவ்வான்ம சக்தியே ஆண்மை நிரம்பிய ஆண் மக்களையும், பெண்மை நிரம்பிய பெண்மக்களையும் தோற்றுவிப்பது. அஞ்சாமை, அடக்கம், வாய்மையாதிய நற்குணங்கள் உண்ணிறைந்த ஆன்ம சக்தியின் புறத்தோற்றங்களாவன. இவை பற்றுக் கோடாகச் சனசங்கத்துக்குப் பலவகைப் பட்ட நன்மைகளும் விளைகின்றன. அகத்தினழகு முகத்திற் றெரியுமாதலால் உண்ணிறைந்த சாந்தம், பொறுமை, தயையென்னும் நற்குணங்களின் வழியாகப் புறத்தழகு நிரம்புகின்றது. பரம்பரையாக இந்நற்குணங்கள் நிறைந்த குடும்பத்திலே அழகுள்ள குழந்தைகள் பிறக்கின்றன. ஆதலால் தேசத்திலே ஆண்மை நிரம்பிய ஆண் மக்களும் அழகு நிரம்பிய பெண்மக்களும் தோற்றவேண்டுமாயின், நாம் அனைவரும் அதற்காகத் தவமியற்றுதல் வேண்டும்; நம்மிடத்தே ஆன்ம சக்தியை விருத்தி செய்துகொள்வோமாயின் அதன் பயனாகத் தேசம் நலனடையும்.

'வாய்' என்னும் சொல் வாய்மையைக் குறிக்கு மென்று கூறினேம். வாய்மை யென்பது சத்தியம். நீரானது புறத்தேயுள்ள பொருள்களைச் சுத்தஞ் செய்வது போல வாய்மை மனத்தினைப் பரிசுத்தப் படுத்துவதெனத் திருவள்ளுவ நாயனர் கூறுவர். மனம் பரிசுத்தமடையுமாயின் ஆண்மையின் பால வாகிய நற்குணங்கள் பல வந்தெய்துவன. வாய் மையுடையோன் பயனில்லாத வார்த்தைகளை யுரைக்கமாட்டான். புறங் கூறமாட்டான். கடுஞ் சொற் கூறமாட்டான். சகல சுகுணங்களும் அவனை வந்தடைவன.

வெற்றியுந் தோல்வியும் ஆன்ம சக்தியினுல் எய்தப்படுவன. மேலைத் தேசத்திலிருந்து இந்த நாட்டுக்குக் கிறிஸ்துமத போதனை செய்யும் பொருட்டு வந்த போதகர் ஆன்ம சக்தியை ஆதார மாகக் கொண்டிருந்த காலத்தில் அவருடைய மதஞ் சிறிது வேரூன்றியது. பிற்றை நாளில் இம் மத போதகருட் சிலர், பொன்னைத் தருகின் ரேம், பெண்ணைத் தருகின்ரேம், எம்முடைய சம யத்தைக் கைக்கொண்டபின், நுமக்கு லௌகீக விருத்தியுண்டாகும்; என்று கூறியதன் பயனுகக் கிறிஸ்து மதமானது, க்ஷீண தசையையடைந்தது. நாம் நம்மிடத்துள்ள ஆன்ம சக்தியை விருத்தி செய்து நமது தேசத்துக்குத் தொண்டுபூண்டொழுகு வோமாயின், பிறமதத்தாருடைய போதனை நமது சகோதர சகோதரிகளிடத்திற் பலிக்கமாட்டாது.

அளவிடற்கரிய பெரும்பொருள் எம்மிடத்தி லிருக்கிறது; அதுவே எமது ஆன்ம சக்தி. ஆன்ம சக்தி என்ருல் என்ன? அழிந்துபோகும் நீர்மைய

வாகிய உடல் பொருள் என்றின்னவற்றின் மேலுள்ள பற்றினை யழித்து அழியாப் பெரும் பொருளாகிய சத்தியம், பொறுமை, தயை என்னு மிவற்றைப் பெருக்கிக்கொள்பவனிடத்துத் தோன்றுகின்ற ஆற்றலே ஆன்மசக்தி யெனப்படுவது. எல்லா நற்குணங்களுக்கும் நிலைக்களமாகிய ஆண்டவனிடத்து அன்புவைத்து நாம் அவனுடைய பிள்ளைகளென அறிந்துகொண்ட அறிவினாலே ஆன்மசக்தி விருத்தியெய்தும். ஆண்டவனிடத்து அன்புவைத்து, அவனை உண்மைப்பொருளாகக் கண்டவனுக்கு உலகம் பொய்ப்பொருளாகத் தோற்றும் வயல்களிலே நீலோற்பலம் மலர்கின்ற வளம்பொருந்திய தில்லைப்பதியிலே, அசைவின்றி யெரியும் விளக்குச் சுடரினையொத்த நீலமணிபோலும் மிடற்றினையுடையானைய் மைதீட்டிய கரிய கண்ணினையுடைய உமாதேவியார் கண்டு களித்து நிற்கத் திருநடனம் புரிகின்ற நடராசனது திருவுருவத்தைக் கண்ட கண்ணினால் காண்பதற்குப் பிறிது பொருள் யாதுளது என அப்பர் சுவாமிகள் கூறினார். இத்திருவாக்கும் இவைபோன்றவையும் அன்பருடைய உள்ளத்துக்கு உவகையைப் பயப்பன. இவற்றை உளமுருகப் பாடுவதினாலும் சிந்திப்பதினாலும் அன்பைப் பெருக்கி அகத்தைச் சுத்திசெய்து கொள்ளலாம்.

சுய நம்பிக்கையினாற் செயற்கரிய பெருஞ் செயல்களையுஞ் செய்துமுடிக்கலாம். நாம் சிறியோர், நம்மால் ஒன்றும் இயலாது என்று கூறுவோமாயின் கருதியது முடிக்குமாற்றல் நம்மிடத்து உண்டாக மாட்டாது. நாம் ஆண்டவனுடைய

பிள்ளை, நன்மையிலும் தீமையிலும் அவன் நம்மோடிருக்கின்றான் என்னும் உண்மையையறிந்து முழுமனத்தோடு எக்கருமத்தையும் புரிவோமாயின் அக்கருமம் அநுகூலமாக முடியும். உயர் குடியிற் பிறந்தவன் வறுமை வந்தெய்திய காலத்தும் தனது குடிப்பிறப்பை மறப்பதில்லை. அதுபோலவே நமது சமுதாயத்துக்கு எவ்வளவு குறைவு ஏற்பட்ட போதிலும், சர்வலோக காரணராகிய சிவபெருமானும் உமாதேவியாரும் நமது தாய் தந்தையர் என்பதை நாம் ஒருபோதும் மறந்துபோகக் கூடாது.

நமது ஆண்டவனுக்கும் எம் பெருமாட்டிக்கும் நாம் மக்களாயின், ஆன்மகோடிகளாகிய நாமெல்லாம் சகோதரரென்பது நாம்மறந்து போகக்கூடாது. ஜீவதயையில்லாதோன் சிவனிடத்து அன்புடையவனாகான். தயையுடையவனிடத்துத் தந்நலமறுப்புத் தோன்றும். ஆண்டவனிடத்து நாம் ஒன்றுபட்டிருக்கின்ற தன்மையை யுணர்ந்து அதனைச் சதா தியானிப்போமாயின் நமது சனசங்கத்திலே இந்நாட்களிற் காணப்படுகிற ஒற்றுமையின்மை, பொறாமை, லோபம் முதலிய துர்க்குணங்கள் நம்மை விட்டகலும்; ஆன்ம சக்தி விருத்தியடையும். ஆண்மை நிரம்பிய ஆண் மக்களும், பெண்மை நிரம்பிய பெண் மக்களும் நமது குலத்திலுதிப்பார்கள். இம்மையிலும் மறுமையிலும் நாம் பெருவாழ்வினையடைவோம்.

---

# 12. சங்கம்

சங்கம் என்ருல் என்ன? தனித்தொருவர் செய்யும் முயற்சிக்கும் பலரொருங்கு திரண்டு செய்யும் முயற்சிக்கும் தாரதம்மியம் என்ன? கூட்டுறவு, ஐக்கியம் என்னும் இவற்ருல் யாம் எய்தக்கூடிய பயனென்ன? மேற்குறித்த குணங்கள் எம்மிடம் குறைவாகவிருப்பின், யாம் அவற்றை விருத்தி செய்துகொள்வது யாங்ஙனம்? ஒற்றுமையில்லாமையால் நமது நாடு துன்புறுகின்றதென ஆராய்வுடையோர் கூறுகின்றனரே. ஆங்ஙனமாயின் அவ்வொற்றுமையை யாம் எவ்வழியாகப் பெருக்கிக் கொள்ளுதல் கூடும். இவற்றையும் இவற்றைச் சார்ந்த விஞக்களையும் ஆராய்ந்து நோக்குவோமாக.

புத்த பகவான் தமது கொள்கையை உலகத்திற் பரவச் செய்யும் பொருட்டாகப் புத்த சங்கத்தை ஏற்படுத்தினர். சங்கம் என்னும் மொழி புத்தருக்கு முன்பும் உளதாயினும் அவரே அதனைப் பெருவழக்காக உபயோகித்தார். மதுரையிலிருந்து தமிழாராய்ந்த சங்கங்களுக்குக் "கூடல்" என்னும் தமிழ்ப் பெயரிருந்ததாக ஊகிக்கக்கிடக்கின்றது. புத்தருடைய கொள்கையைப் பரவச்செய்யுஞ் சங்கம் "புத்த சங்கம்"; தமிழ் வளர்க்குஞ் சங்கம் "தமிழ்ச் சங்கம்"; வரியிறுப்போர் நகர நன்மையைக் கருதி ஏற்படுத்திய சங்கம் "நகர சங்கம்"; அரசியற் பொருட்டாகத் தேசாதிபதிக்கு ஆலோசனை கூறுஞ் சங்கம் "மந்திராலோசனைச் சங்கம்"; இளைஞர் தமது தேர்ச்சிப் பொருட்டாக ஏற்படுத்திக்கொண்ட சங்கம் "இளைஞர் தேர்ச்சிச் சங்கம்";

சைவச் சிறுவரது வித்தியாவிருத்திக்காக முயற்சிக்குஞ் சங்கம் "சைவ வித்தியாவிருத்திச் சங்கம்". இங்ஙனம் நோக்கும்போது சங்கம் என்பது தனக்கென்று ஒரு கொள்கையுடையதாயிருத்தல் வேண்டுமென்பதும், அக்கொள்கையைப் பெருக்கிக்கொள்ளும் விருப்புடையாரை அங்கத்தினராகக் கொண்டு பெருக்குதற்கேற்ற வழிவகைகளை நாடி அவற்றின் வழி நிற்பதென்பதும் நன்கு புலப்படுகின்றன. சங்கத்தின் ஆற்றல் எவ்விடத்துத் தங்கியிருக்கின்றதென்பதை இனி ஆராய்வோம். சங்கத்தின் நோக்கம் பலவாகவிருப்பின் வலிமை கூறுபட்டுச் சிதறுண்டு போம்; ஆதலால் நோக்கம் ஒன்றாக விருத்தல் வேண்டும்; அதுவும் சிறப்பாகவிருத்தல் வேண்டும். சிறப்பு என்றால் தனக்கென்றொரு தன்மையையுடையதாயிருப்பது. பொது நீங்கிய தன்மையே சிறப்பெனப்படுவது. ஒரே கருத்துடையார் பலர் ஒன்று கூடுவதனால் சங்கத்துக்கு வலிமையுண்டாகின்றது. அங்கத்தவர் கருத்து வேறுபடுவதனாலே சங்கம் அசைவுறும்; கருத்து வேறுபட்டோர் சங்கத்தினது நோக்கத்துக்கு மாறு புரிவாராயின் அத்தகைய சங்கம் நிர்மூலமாகப்போம்.

உடலின் கண்ணே சிரம், கை, கால், வயிறு முதலிய அவயவங்கள் அமைந்து நின்று ஒன்று கூடித் தொழில்புரிவது போல் சங்கத்தின் அங்கத்தினர் ஒன்றுகூடித் தொழில் புரிதற்குரியராதலின் சங்கமும் உயிர்ப் பிராணியைப் போன்று தோற்றமும், வளர்ச்சியும், தேய்வும், மாய்வும் உடையதாயிருக்குமென்பது. "எண்சாணுடம்புக்குஞ் சிரசே பிரதானம்" என்றபடி சங்கத்துக்குச் சிரம்

போன்று அமைந்து நிற்கும் அக்கிராசனரே சங்கத்தின் வளர்ச்சிக்குப் பிரதான காரணராவர். அவரோடு உடனின்று ஆலோசனை கூறும் நிர்வாக சபையார் சிரத்தினுள் உள்ள மூளை போன்றவர். காரியதரிசி கரம்போன்றவர். இணைக்காரியதரிசிகளுளராயின் அவர் இரு கரம்போன்று ஒருங்கு கூடித் தொழில்புரிதற்குரியவராவர். கணக்குப் பரிசோதகர் கண்போன்றவர். தனதிகாரி வாழ்வுக்கு ஆதாரமாகிய பொருளைப்பெற்றுப் பிரித்துக்கொடுப்பதனால் வயிறுபோன்றவர். அங்கத்தவர் பிறபாகங்கள் போன்றவர். அனைவருஞ் சேர்ந்த சங்கம் ஓர் உயிர்ப்பிராணியை நிகர்த்தது.

சங்கங்கள் கொள்கை வேறுபாட்டாற் பலதிறப்படுவன என ஆரம்பத்திற் கூறினோம். மனிதனால் அடைவதற்குரியபுருஷார்த்தங்கள் நான்கேயாதலின் அவற்றுக்கியையச் சங்கங்களும் அறநெறிச் சங்கம், பொருணெறிச் சங்கம், இன்பநெறிச் சங்கம், வீட்டுநெறிச் சங்கம் என நாற்பாற்படுவன. வீடு பேறு ஒன்றே கருதித் துறவு பூண்டாருக்கு உரியது. வீட்டுநெறிச் சங்கம். எஞ்சிய மூன்றும் இல்வாழ்வார்க்குரியன. இசை, நாடகம் என்றிவற்றை விருத்தி செய்வன இன்ப நெறிப்பாற்படுவன. ஐக்கிய நாணய சங்கங்கள் போல்வன பொருட்பாற்படுவன. விவேகானந்த சபைபோல்வன அறத்தின்பாற்படுவன.

ஒரு மனிதன் வேறுபட்ட கொள்கைகளையுடைய பல சங்கங்களுக்கு அங்கத்தவனாகவிருக்கலாம்; ஆயினும் மாறுபட்ட கொள்கைகளை

யுடைய சங்கங்களுக்கு அங்கத்தவனாக இருத்தல் கூடாது. அங்ஙனம் இருக்க நேரிடுமாயின் அவனது வாழ்க்கை, படிப்பது திருவாசகம் இடிப்பது சிவன் கோயில் என்றவனது வாழ்க்கையைப் போல் நிலைகுலைந்து அல்லோல கல்லோலப்படும். ஆதலால் கருத்தொவ்வாவிடத்தை யொழித்துக் கருத்தொத்த விடத்தைச் சார்ந்து நிற்றலே முறையாகும்.

ஒருமனப் பட்ட தகவுடையாரை அங்கத்தவராகக் கொண்ட சங்கம் நிலைபெற்று நின்று நன்மை பயக்கும். கானகத்து வாழும் விலங்குகள் தாமும் தம்முள்ளே தாம் விரோதியாது தலைவற்கு அமைந்தொழுகும் தன்மை பூண்டனவாமென்னில் ஆறறிவுடைய மனிதர் அமைந்தொழுகாது நிற்பது அழகாகுமா? தலைவற்கு அமைவது என்றால், சங்கத்தின் விதிகளுக்கியைய நியமித்த தலைவன் ஒரு வழிச் செல்வானாயின், அவனுக்கு மாறுகொள நில்லாது ஒத்து நின்று கருமமுடிப்பது. தலைவனைத் தெரிந்தெடுத்துக் கொண்டபின் அவன் வழிநிற்றல் முறை. அவன் தகுதியற்றவனெனப் பெரும்பாலோர் அபிப்பிராயப்படுவாராயின் தகுதியுள்ளவனொருவனை விரைந்து தெரிவுசெய்து அவன்வழி நிற்பது மரபு அஃதன்றி, தலைவன் வாக்குக்கு எதிர்வாக்குக் கூறி முரணி நிற்பது முறையாகாது. அமைந்தொழுகும் பெருங்குணத்தை ஆங்கிலேயர் "Loyalty" என்பர். இஃதில்லாத வழி ஒன்று கூடி வாழும் சமூக வாழ்க்கை இலதாகின்றது.

இதை வாசிக்கும் நேயர்கள் பலர் "ஐக்கிய நாணய சங்கம்" என்னும் "கூட்டுறவுச் சங்கங்

களைப்பற்றி அறிந்திருக்கக் கூடும். இச்சங்கங்கள் அங்கத்தவர்களுக்கு எல்லாவிடத்தும் நன்மையையே பயப்பன. அவற்ருல் விளைகின்ற தீமையொன்றுமில்லை. அங்ஙனமாயினும் நன்மையைத் தரும் அச்சங்கங்களை ஏற்படுத்த முயல்வார் சிலரேயாவர். சென்ற வாரத்தில் மாணவர் கூட்டுறவுச் சங்கங்கள் ஏற்படுத்தவேண்டுமென்று விரும்பிய ஒரு பெரியாரோடு பலப்பல கல்வி நிலையங்களைப் போய்ப் பார்வையிட்டோம். யாழ்ப்பாணத்திலுள்ள மாணவர் அனைவரும் புத்தகம், கடுதாசி, லேகினி முதலிய பொருள்களை வாங்குவதற்காக வருடந்தோறும் செலவுசெய்யும் பொருள் சுமார் எண்பதினயிரம் (80,000) ரூபாவாகும். இதில் விற்போருக்குரிய லாபம் நூற்றுக்குப் பதினைந்து வீதமாகப் பன்னீராயிரம் (12,000) ரூபாவாகும் அதாவது புத்தக வியாபாரிகள் மாதம் ஆயிரம் ரூபா பள்ளிக்கூட மாணவர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளுகிருர்கள். மாணுக்கர்கள் தமக்கு வேண்டிய பொருள்களைப் பெறுவதற்குத் தாமேயொரு கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்திக்கொண்டால் இந்த நயம் முழுவதும் மாணவருக்கு உபயோகமாகுமென்பதை அப்பெரியார் எடுத்துத் தெளிவாகக் காட்டினர். மாணுக்கர்கள் கூட்டுறவுச் சங்கங்களை நடத்தும் வழியைப் பாடசாலையிற் பயின்று கொண்டால் இல்லறவாழ்விலும பொருள்விருத்திச் சங்கங்களையேற்படுத்த அருகராவார்.

அறநெறி, பொருணெறி, இன்பநெறி என முப்பாற்பட்ட லௌகிக சங்கங்களும் சிறந்து வளர்ச்சியடையும் நாடே நாகரீகம் பொருந்திய

நாடெனப்படும். நமது நாட்டின் முன்னேற்றத் தைக் கருதியுழைக்கும் சங்கங்களைச் சேர்ந்து ஒத் துழைத்தும், அமைக்கவேண்டிய புதுச் சங்கங்களை அமைத்து முயற்சித்தும் நமது தேசத்துக்கும் பாஷைக்கும் சமயத்துக்கும் வேண்டுவன புரிவோ மாக.

---

## 13. யாழ்ப்பாணத்துக்கு ஒரு பல்கலைக் கழகம்

இலங்கைத்தீவுக்கு ஒரு சர்வகலாசாலைவேண்டும்; இதனை ஆக்ஷேபித்துக் கூறுவார் மிகச்சிலரேயாவர். கௌரவம் பொருந்திய சட்டசபை அங்கத்தவர் களும் இந்நன்முயற்சிக்காக முழுமனத்துடனே முப் பது லக்ஷம் ரூபா புறநீங்கலாகவெடுத்து வைத் திருக்கின்றார்கள். இன்னும் பன்மடங்கு செலவிடத் தயாராயிருக்கின்றார்கள். காரியசித்திக்கு இன்றி யமையாது வேண்டப்படுவனவாகிய இடம், பொருள், ஏவல் என்னும் மூன்றிற் பொருளுக் குப் பஞ்சமில்லை; பொருளுளதாகலின் ஏவலும் ஏற்படும் இடத்தைப் பற்றியே ஆக்ஷேபனை நடந்து கொண்டிருக்கிறது. இவ்விஷயத்தைப் பற்றிய வாதம் சட்டசபையிலே நீடித்து நடந்தது. கொழும் புப்பட்டினக் கட்சியார் தோல்வியடைந்தனர்; கண்

டிக்கணித்தாயுள்ள தும்பறைப் பள்ளத்தாக்கு இயற்கை வனப்பினாலும், சுகத்துக்கேற்ற சீதோஷ்ண நிலையினாலும் கல்வி கற்கும் மாணவருக்கு மிகச் சாதகமானது என்பது பலருடைய அபிப்பிராயம். பெரும்பாலாருடைய அபிப்பிராயமே சட்டசபைத் தீர்மானமாக முடிவெய்துமாதலால், இனிமேல் வருஞ் சந்ததியாரது உயர்தரக் கல்விக்குரிய நிலையம் தும்பறைப் பள்ளத்தாக்கேயாகும். சர்வகலாசாலை யேற்பட்டபின் பள்ளத்தாக்கும் நகரமாகும். தும்பறை நகரம் இயற்கை வனப்போடு செயற்கை வனப்பும் பொருந்தி விளங்கும்.

உயர்தரப் பாடசாலைகள் பல கொழும்பிலும் யாழ்ப்பாணத்திலுங் குழுமியிருக்கின்றன. ஆதலால் இவ்விரண்டினுள் ஒன்றே சர்வகலாசாலையின் பூரண நலத்தைப் பெறுதற்குத் தகுதியுடையதென்பது சிலருடைய அபிப்பிராயம். தும்பறையிற் சர்வகலாசாலை யேற்படினும் குறித்த இரு நகரங்களிலும் இப்பொழுது நடந்துவருகின்ற கல்விமுயற்சி குறைவடையாதிருக்க வேண்டுமென்பது கல்விமுயற்சியில் ஈடுபட்டோரது கோரிக்கை. அறிஞர் கூடிய இடமே அவைக்களமெனப்படுவது. அழகமைந்த கட்டிடங்களின்றொகுதி தன்னளவிலே சர்வகலாசாலையாகமாட்டாது. அறிவுடையோர் பலர் கூடியிருக்கும் இடம் ஆரண்யமாயினும் அதுவே சரஸ்வதி தேவி நடனம் புரிவதற்குரிய அரங்கக்கூடமாகும். பரம ஞானத்தை யுணர்த்துகின்ற உபநிடதங்களுக்கு ஆரண்யகங்களென்னும் பெயருண்டு; அவை ஆரண்யத்தில் வசித்து உண்மை யாராய்ச்சி செய்துவந்த முனிபுங்கவர்களால் வெளியிடப்பட்டனவாகலின்.

சர்வகலாசாலை எவ்விடத்திலேற்படினும் ஏற்படுக. பாவலரும் நாவலரும் வசித்துவந்த யாழ்ப்பாண நாடு கல்வித்துறையில் மேன்மேலும் விருத்தியடைய வேண்டுமென்பதே எமது உள்ளக் கிடக்கை. தமிழ்ப் புலமையும், சமஸ்கிருதப் புலமையும், மேலை நாட்டுக் கலைப்புலமையும் யாழ்ப்பாணத்திலே நிரம்பவேண்டும். புத்திக் கூர்மையுள்ள நமது சிறுவர் தத்துவ ஞானிகளாகவும், விஞ்ஞான சாஸ்திரிகளாகவும், வடமொழிப் பண்டிதர்களாகவும், தமிழ்நூற் புலவராகவும் சிறந்து விளங்க வேண்டும். உலகம் புகழத்தக்க புது நூல்கள் யாழ்ப்பாணத்திலிருந்து உற்பத்தியாக வேண்டும்.

எமது மொழிகளை ஊன்றி யாலோசியாதோர் எமதெண்ணம் கனவு நீர்மையதென்று கருதுதலுங் கூடும். அங்ஙனங் கருதுவோர் யாழ்ப்பாணத்தின் புராதன சரித்திரத்தை யறியாதோராவர். பண்டை நாளில் நல்லூரிலே சிங்கையாரியச் சக்கரவர்த்திகள் நிறுவிய தமிழ்ச் சங்கமானது சர்வகலாசாலை நீர்மையதாய் இரகுவம்சம் போன்ற காவியங்களையும், பரராஜசேகரம் போன்ற வைத்திய நூல்களையும், செகராஜசேகரம் போன்ற சோதிட நூல்களையும் தரவில்லையா? பின்னளில் அமெரிக்க மிஷன் சங்கத்தார் நடத்திய செமினரியென்னுஞ் சர்வகலாசாலை, இந்தியாவிலுள்ள சர்வகலாசாலைகளுக்கு மார்க்கோபதேசியாய் இருந்ததன்றோ? இடைப்பட்ட காலத்தில் ஞானப்பிரகாச முனிவர், வைத்தியநாத முனிவர் போன்ற வடமொழி வித்துவான்களும், செமினரி சிறந்திருக்கும் நாளில் கணித சாஸ்திரிகளும், விஞ்ஞான சாஸ்திரிகளும் தர்க்க

நூல் வல்லுநரும் உலகப் பிரசித்தியான கீர்த்தியோடு யாழ்ப்பாணத்தில் வசித்தனரல்லவா? தொன்றுதொட்டுக் கல்வி வளஞ் சிறந்து விளங்கிய யாழ்ப்பாணத்தைப் புறக்கணித்துக் கல்விமணமில்லாத தும்பறையை நாடிச் செல்வது, அவலை நினைத்து உரலையிடித்தது போலாகுமன்றோ?

சர்வகலாசாலை யெவ்விடத்தமையினும் அமைக. உண்மைக் கல்வி விருத்தி நமது நாட்டில் ஏற்படுமாயின் அதுவே நமக்குப் போதுமானது. கல்வி விருத்திக்கு ஏற்பட்டிருக்கும் இடையூறுகள் பலவுள. அவற்றை யாராய்ந்தறிந்து களைதல் வேண்டும். சென்ற சில ஆண்டுகளாக லண்டன் மற்றிக்குலேஷன் கேம்பிறிட்ஜ் சீனியர் என்னும் சர்வகலாசாலைப் பரீக்ஷைகளிற் சித்தியடைந்தோர் தொகை மிகவும் குறைந்து போயிற்று. இதற்குரிய காரணங்கள் யாவையென இலங்கை வித்தியா பகுதித் தலைவரும், வித்தியாதரிசிகளும், பாடசாலைத் தலைவர்களும் ஆசிரியர்களும் கல்வித்துறையிற் சிரத்தையுடைய பெற்றோரும் ஆராய்கின்றார்கள். உயர்தரப் பாடசாலைகளிற் கைக்கொள்ளப்பட்டுவருங் கல்வி முறை இயற்கைக்கு மாறுகிய தென்பது இப்பொழுதுதான் உணரப்பட்டு வருகின்றது. இம்முறையை இயன்றவரை சீர்திருத்தம் பண்ணும் நோக்கமாக வித்தியாபகுதித் தலைவர் சமீபத்தில் ஒரு மகாசபை கூட்டப்போகின்றார்.

சர்வகலாசாலை விஷயமும், பொதுவாகக் கல்வி விருத்திக்குரிய முயற்சிகளும் இவ்வாறாக, நமது சமயாபிவிருத்திக்கு வழியாகிய சைவக்கல்வி

தேசத்தின் பற்பல பாகங்களிலும் ஆரம்பமாகி நடைபெற்றுவருகின்றன. சைவப் பிள்ளைகளுக்குச் சைவக்கல்வி புகட்டவேண்டுமென்னும் பெருங் கருத்துச் சமூகத் தலைவர்களுடைய உள்ளத்திலே நிலைபெற்று வேரூன்றி நிற்கின்றது. செய்யவேண்டிய முயற்சியோ மிகப்பரந்த நீர்மையது. ஒரு நூற்றாண்டாகக் கிறிஸ்தவ சபைகள் பெருமுயற்சி செய்து ஏற்படுத்தியிருக்கும் கல்விக்கழகங்களை ஒத்த கல்விச்சாலைகளை நாம் ஆக்குவதற்கு ஆண்டு பல கழிதல் வேண்டும். நமது முயற்சி சிறப்புற நிறைவேற வேண்டுமாயின் தியாக சிந்தையுடைய ஆண் மக்கள் பலர், இம்முயற்சிக்காகத் தமது வாழ்நாளை அர்ப்பணஞ் செய்யவேண்டும்.

ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களுடைய முன் மாதிரியைப் பின்பற்றிச் சைவசமயமும் சைவக் கல்வியும் நிலைபேறடைய வேண்டுமென்னும் ஒரு நோக்கத்தோடு நைட்டிகப் பிரமச்சாரிகள் பத்துப்பேர் முன்வருவார்களாயின் இந்நாடு நலமடையும். சைவக் கல்வி வளர்ந்தோங்கும். சைவ சமயம் விருத்தியடையும்.

---

# 14. யாழ்ப்பாணத்துத் தமிழ்ப்புலவர்

[ யாழ்ப்பாணம் பருத்தித்துறை ஆத்தியடிச் சைவ வாலிப சமாஜத்து ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்ட தினத்தில் ஸ்ரீமத் சுவாமி விபுலாநந்தர் அவர்கள் செய்த ஓர் உபந்நியாசத்தின் சங்கிரகம் ]

கல்வியறிவொழுக்கங்களிற் சிறந்த பெரியோர்களே!
தமிழணங்கின் செல்வப் புதல்வர்களே!!

திருநிறைந்த தமிழ் நாட்டினை அரசு புரிந்து வந்த சேர சோழ பாண்டிய மன்னர் தமிழ்ப்புலவரை ஆதரித்துத் தமிழ்மொழியை வளர்த்து வந்தனர். நான்மாடக் கூடலாகிய மதுரைத் திருநகரிலே கபிலர், பாணர், நக்கீரர் முதலிய உத்தமப் புலவர் சங்கமிருந்து தமிழாராய்ந்த காலத்து, ஈழமண்டலத்தில் வதிந்த பூதன்றேவனார் என்னும் புலவர் ஒருவர் பாண்டி மண்டலம் போய்க் கவியரங்கேற்றினர் என்பது சங்கத் தமிழ் நூல் சான்றாக அறியக் கிடக்கின்றது. இவர் காலத்துக்குப் பின்னர் புலவர் பற்பலர் தோன்றித் தமிழ் வளர்த்திருப்பாரேனும் இவர்க்கும் அரசகேசரியாருக்குமிடையே விளங்கிய அறிஞர் பெயரை யாம் அறிந்துகொள்வதற்கில்லை. அரசகேசரியார் முதல் ஆறுமுகநாவலர் ஈறாகவுள்ள உத்தமப் புலவர் சிலருடைய சற்சரிதத்தை ஆராய்ந்துணர்வதே நமது நோக்கமாகும். "பழமை பாடிச் செழுமை தேடு" என்றபடி நமது தொல்லியல்பினை யாராய்ந்துணர்வது தற்காலத்துள்ள குறைவுகளை நிறைவுபடுத்துவதற்கு இன்றியமையாததாமென்க.

யாழ்ப்பாணத்து நல்லூரிலிருந்து அரசுபுரிந்த பரராசசேகர மன்னரது மருகராகிய அரசகேசரியார் சங்கத் தமிழ் நூல் என்னும் பாற்கடலிடைப் படிந்து இரகுகுல சரிதையை யுரைக்கும் கவியமுதத்தைத் தமிழ்ப்புலவருக்கு நல்கினர். வடமொழிப் புலவரேருகிய காளிதாச மகாகவி செய்த பெருங்காப்பியத்தின் மொழிபெயர்ப்பாகிய தமிழ் இரகுவமிசத்தைத் தந்த இப்பெரும் புலவரும் பரராசசேகர மன்னவரது தம்பியாகிய செகராசசேகர மகாராசாவும் பிறரும் தமிழ் வளர்த்த காலத்தில் யாழ்ப்பாணத்துநல்லூரிலே சுதந்திரஉணர்வும் அருந்தமிழறிவும் நிறைந்திருந்தனவாதலின் அக்காலம் காவிய நூல்கள் உதித்தற்குரிய காலமாயிற்று. திருக்கோணசல மான்மியத்தை வகுத்துரைக்கும் தக்கிண கைலாச புராணமும் இக்காலத்துத் தோன்றியதென்பர். கணிதம், வைத்தியம் முதலிய பல துறைகளிலும் இயற்றப்பட்ட நூல்கள் நல்லூர்த் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேறின. தமிழ்நாடாகிய யாழ்ப்பாணம் அந்நிய மன்னருடைய ஆட்சியுட்பட்ட பின்னர்த் தமிழணங்கு அரசராதரவை இழந்தாளேனும் முனிவராதரவைப் பெற்றுத் தளர்வின்றி வளர்ந்து வந்தனள். திருநெல்வேலி ஞானப்பிரகாச முனிவரும், அளவெட்டி வைத்தியநாத முனிவரும் சிதம்பர க்ஷேத்திரத்திலே பலகாலம் வசித்துத் தமிழையும் சைவத்தையும் வளர்த்து வந்தாரென அறிஞர் வாக்கானறிகின்றோம். ஞானப்பிரகாச முனிவர் சிவஞான சித்தியாருக்கு உரைவகுத்தவர். வடமொழியில் பௌட்கராகம விருத்தி முதலிய ஞானநூல்கள் பலவற்றை இயற்றியவர். வைத்திய நாத முனிவர் வியாக்கிர பாத புராணம் பாடியவர்.

இம்முனிவரிருவர் காலத்துக்குப்பின்னர் யாழ்ப் பாணத்து நல்லூரிலுதித்த வரகவியாகிய சின்னத் தம்பிப் புலவரும் சுன்னுகத்து மறையவர் குலத் துதித்த வரகவியாகிய வரதபண்டிதரும் தமி ழணங்கினை ஆதரித்து வந்தனர். சின்னத்தம்பிப் புலவர் வில்லவராய முதலியாருக்கு மைந்தர். மறைசையந்தாதி, கல்வளையந்தாதி, கரவைவேலன் கோவை என்னும் பனுவல்களை அருளியவர். வர கவித்துவம் பெற்ற வரதபண்டிதர் சிவராத்திரி புராணம், அமுதாகரம், கிள்ளைவிடுதூது, பிள்ளை யார் கதை முதலிய பிரபந்தங்களை உலகுக்கு அளித்தவர்.

இவர் காலத்துக்குப் பின்னர் தமிழ் விளக் கேற்றியவர் தொண்டை மண்டலத்துக் காஞ்சிபுரத்து வேளாளர் குலத்துதித்து யாழ்ப்பாணத்து வந்து வதிந்த கூழங்கைத் தம்பிரான் எனப் பெயரிய பெரியார் என்பது. இவர் வண்ணை வயித்திலிங் கச் செட்டியாருடைய வேண்டுகோளின்படி யாழ்ப் பாணம் வந்து, இருபாலை நெல்லைநாத முதலியா ருக்கும், அவர் மைந்தர் சேனுதிராய முதலியாருக்கும் பிறருக்கும் தமிழாசிரியராக விளங்கியவர். மாத கல் மயில்வாகனப் புலவருக்கும் இவர் தமிழ் உணர்த்தினரென ஒருசாரார் கூறுவர். மயில்வாக னப் புலவர் வரத பண்டிதரது காலத்தவர் என்பது மற்றொருசாராரது கொள்கை

பரராசசேகரனது பெயர் நிறுவித் தமிழ் விரித் துரைத்த வையாவின் கோத்திரத்தில் உதித்தவ ராகிய மயில்வாகனப் புலவர் புலியூர் யமகவந்

தாதி, யாழ்ப்பாண வைபவம் முதலிய நூல்களை இயற்றியவர். இவர் புதல்வராகிய சிற்றம்பலப் புலவர் சேனாதிராய முதலியாருக்குத் தமிழாசிரியர். கூழங்கைத் தம்பிரானிடத்தும் சிற்றம்பலப் புலவ ரிடத்தும் தமது தந்தையாராகிய நெல்லைநாத முத லியாரிடத்தும் தமிழ் பயின்ற சேனாதிராய முத லியார் புலவர் போற்றும் ஆறுமுகநாவலருக் கும் சரவணமுத்துப் புலவருக்கும் பீதாம்பரப் புல வருக்கும் தமிழாசிரியராக விளங்கினார். இவரியற் றிய நூல்களாவன நல்லை வெண்பா, நல்லைக் குற வஞ்சி, நல்லையந்தாதி, நீராவிக் கலிவெண்பா, ஊஞ்சற் பதிகங்கள் முதலியன. இக்காலத்திற் சுன்னாகத்தில் கவி திலகராக விளங்கிய முத்துக் குமார கவிராயர் பல தனிநிலைச் செய்யுட்களையும் பிரபந்தங்களையும் இயற்றினார். வேதாந்த சுயஞ் சோதி, ஆத்தும போதப் பிரகாசிகை என்னும் நூல்களை இயற்றிய சரவணமுத்துப் புலவரும் இக்காலத்தவர். நல்லூர்த் தமிழ் மன்னர் மடித்தலத் திருந்து விளையாடித் தவத்தின் மிக்க முனிவ ருரைத்த ஞானமொழி கேட்டு மகிழ்வெய்தி வரகவி வாணரொடுடனுறைந்து கழிமகிழ்வெய்திய தமிழ் மகள் யாழ்ப்பாணமென்னும் நாடக மேடையில் தனது பூரண வனப்புத் தோன்ற நடித்த காலம் ஆறுமுகநாவலர் காலமாகும்.

---

# 15. விபுலாநந்தர் கடிதம்

உலகமாதாவின் திருவருளை முன்னிட்டு,

பிரியநண்பர் நல்லதம்பியவர்கட்கு எழுதுவது:

29 - 1 - 41 கடிதமும் சில மாதங்கட்குமுன்பு எழுதிய கடிதமும் கிடைத்தன. 'எங்கணுயினும் அன்பராயிருப்பவர் இதயம் விட்டகலாரே' என்றபடி உண்மை நட்புப் பிறிதொரு சார்பு வேண்டாது நிலைத்திருப்பது. 'வாய்ச் சொற்கள் என்ன பயனுமில' எனும் ஆன்ருேருரையின் உண்மையினையும் யாமிருவரும் அறிவோம். இவ்வெழுத்து உங்களது முகவரிக்கு வருகிறதாயினும் நண்பர் இராமநாதபிள்ளைக்கும் உரியது. சில ஆண்டுகள் நேரிற் கண்டு உரையாடும் நலம் கிடைத்திலதாயினும் அவர்கள் கலித்தொகைப் புத்தகம் கையிலேந்திக் கொண்டு விவேகானந்த சபைக்கு வந்த அந்நாளிலே அகக்கண்ணுட் பதிந்த நினைவு அப்படியேயிருக்கிறது. வலையபட்டியிலும் தமிழ்த் தொண்டாற்றிக் கொண்டிருந்தார்கள். இமயத்துக்கு வந்த என்னையும் தமிழ்த் தொண்டு விடேனென்று பற்றிக்கொண்டிருக்கிறது 'அளுத்துகமம்' என்னும் சிங்கள மொழிக்குப் 'புத்தூர்' என்பது தமிழ் மொழிபெயர்ப்பென்றெண்ணுகிறேன். நீங்கள் புத்தூருக்குத் தமிழ்த் தொண்டாற்றப் போகின்றீர்கள். நண்பர் இராசநாயகம் (உவாட்சன்) அவர்கள் முஸ்லீம் ஆசிய கலாசாலைக்குப் பலவற்றுலும் தகுதி வாய்ந்த நல்லதம்பியைத் தலைமையாசிரியராகப் பெறுவதைப் பெரும் பேருகக் கொள்ள வேண்டும். 'மனக்கினிய பெருங்குணத்து நல்ல

தம்பிப் பாவலன்' என்று அழியாத தமிழ்ச் செய்யுளிலே நான் நற்சான்று பகர்ந்து விட்டேன். தமிழறிஞர்களிடையே என்னுரை ஓரளவிற்குச் செல்லும். வேண்டிய விடத்து அந்தச் செய்யுளைக் காட்டலாம். தமிழறியாதாரிடத்துச் செல்லுந்தரத்ததாக ஆங்கிலத்திலே ஓர் உரையெழுதித் தர வேண்டும் என்று நீங்கள் கேட்கலாம். அதற்கு மறுமொழியாகத் தமிழருமை அறியாதவர்களிடத்து வேலைக்குப் போக வேண்டாம் என்று நான் கூறுவேன். உங்கள் அண்ணருக்கு ஆங்கிலத்திலே ஒரு நற்சான்று எழுதியனுப்பினேன். அவரது நிலை வேறு. நீங்கள் எந்நாளும் தமிழ்த்தொண்டு புரிய வேண்டும். கூழுணவுதான் கிடைத்தாலும் தமிழ்த் தாயின் அருளெனக் கருதி ஏற்றுக்கொண்டு விரிந்த முறையிலே தொண்டாற்ற வேண்டும். எனது வாழ்க்கையிலே பொருள் வருவாய் பெரிதாகவிருந்த உயர்ந்த உத்தியோகங்கள் பலவற்றை ஏற்று நடத்தினேன். ஒன்றுக்காவது கேள்விக் கடிதமோ பிறருடைய நற்சான்றோ நான் விடுத்தது கிடையாது.

"இருக்கு மிடந்தேடி என்பசிக்கே யன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்"

என்றபடி என் பின்னின்று பன்முறை விரும்பியழைத்த இடங்களையே நான் நாடினேன். செட்டிநாட்டரசர் தாமும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்கு வரவேண்டும் என்பதாக என்னிடம் வந்து என்னைக் கேட்டபின்புதான் அவரது கேள்விக்கு நான் ஒரு வாறுக இயைந்தேன். தொண்டு புரிவதையே குறிக்கோளாகக் கொண்டு இரவுபகல் ஓய்

வற்றுக் கல்வியைப் பெருக்கிப் பொதுக்கழகங்களில் விரிவுரை யாற்றுதல், நூலெழுதுதல், திங்கள் வெளியீடுகளிலே ஆராய்ச்சி முடிபுகளை வெளியிடுதல் என்றித்தகைய தமிழ்த் தொண்டுகளைச் செய்து கொண்டு வந்தால் வேண்டிய உயரிடமெல்லாம் தானாகவே வரும். வராவிட்டாலும் குறையொன்றுமில்லை. உடுக்க நான்கு முழத் துணியும் உண்ண அளவான அன்னங் கறியும் பெரியோருடைய கூட்டுறவுமே நமக்கு இவ்வாழ்க்கையில் வேண்டற்பால. தமிழ்ப் புலவராகிய நாம் கம்பனுடைய வழித்தோன்றல்களென்பதை யறிய வேண்டும். அவனைப்போல நாமும் மன்னன் முன் னிலையிலே ஏமாப்போடு நின்று.

> "மன்னவனும் நீயோ வளநாடு முன்னதோ
> உன்னையறிந்தோ தமிழை ஓதினேன்"

என்று துணிவாகச் சொல்ல வேண்டும். ஈழநாட்டிலே உயர்ந்த தமிழறிவு குறைவெய்தி வருகிறது. நாமொருவன் தாய்நாட்டிலும் சிறிது பெயர் பரவத் தொண்டாற்றிக்கொண்டு வருவது போதாது. ஏதாவது வாழ்க்கைக்குச் சிறிது ஊதியந் தரும் தொழிலைப் பார்த்துக்கொண்டு உயர்ந்த தமிழ்த் தொண்டுக்குத் தகுதியெய்தும் வண்ணம் நூலாராய்வதிலும் நூலெழுதுவதிலும் பொழுது கழிக்கும்படி பணிவாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். அரசினருத்தியோகத்திலும் Zahira கல்லூரிக் கடமை சிறந்ததென்பது எனது கருத்து. புலோலியிலே இரு கண்ணுங் குருடராகிய சிதம்பரப்பிள்ளை யென்பவர் எழுதி வெளியிட்ட கந்தபுராண உரையை நாம் பாராட்டியது நினைவிருக்கலாம். 'இரு வேறு

லகத்தியற்கை திருவேறு தெள்ளியராதலும் வேறு என்னும் பொய்யா மொழியை மறக்கக்கூடாது பொருள் அழிந்து போவது; புகழ் நிலவுவது. நிலை யற்ற இவ்வுலக வாழ்க்கையிலே விழைவதற்கு யன இரண்டு. இம்மைப் புகழ், மறுமையின்ப ஈதல் நமக்குரியதேயன்றி இரத்தலல்ல. துறவிய கியும் நான் பிறரையிரந்தது கிடையாது. தொழி லினால் வந்த ஊதியத்தை நான் ஒரு சிறி துய்த்து எஞ்சியதைப் பொதுப்பணிக்கு ஈந்தேன் பிரபுத்த பாரதத்திற்கும் வருவாயுண்டு. அவ்வரு வாயில் ஒரு சிறிது ஆச்சிரமத்திலே எனது உண வுச் செலவுக்குக் கொடுத்து விட்டு மிகுதியை பொதுப்பணிக்குக் கொடுக்கிறேன். உணவையே மறந்திருக்கக் கூடிய நிலை வந்தாற் பெரிதுதான் நட்புரிமை பற்றிச் சொந்தக்கதை அளவு கடந்து படித்துவிட்டேன், (சம்பளமற்ற) வேலை இந்நாட் களில் மிக அதிகம், தமிழ்ப் பொழில், செந்தமிழ் இராம கிருஷ்ண விஜயம் என்னும் வெளியீடு களுக்கு மாதந்தோறும் எழுத வேண்டும். வேறு வெளியீடுகளுக்கு இடையிடையே எழுத வேண்டு மெனத் தமிழ்த் தாயின் கட்டளை பிறந்திருக் கிறது. என்ன நூல் கற்று வருகிறீர்கள்? இந் நாட்களில் எத்தனை பாட்டு எழுதினீர்கள்? என்ன ஆராய்ச்சி செய்துவருகிறீர்கள்? என நான் உங் களைக் கேட்கிறேன். அடுத்த கடிதத்தில் விரிவாக விடை எழுதவும்.

— அன்புள்ள விபுலாநந்தர்

---

